பாகவதத்தில் உள்ள

இருபத்து நான்கு ஆசிரியரை உரைத்த

# அவதூத சம்வாதம்

மூலமும்

நீலகண்டீய உரை விளக்கமும்



உரை ஆசிரியர்

தவத்திரு

## நித்தியானந்த சுவாமிகள்

வேட்டைக்காரன்புதூர்

இஃது

பொருள் உதவி செய்து வெளியிட்டவர்

செ. தங்கமுத்துக் கவுண்டர் அவர்கள்

கோடங்கிபட்டி

கம்பாலபட்டி — மெஜரா.

ஓம் தத் ஸத்

**பாகவதத்தில் உள்ள**

**இருபத்து நான்கு ஆசிரியரை உரைத்த**

**அத்தியாயம்**

# அவதூத சம்வாதம்

மூலமும்

**நீலகண்டீய உரை விளக்கமும்**


உரை ஆசிரியர் :

**தவத்திரு**

## நித்தியானந்த சுவாமிகள்

வேட்டைக்காரன்புதூர்



இஃது

பொருள் உதவி செய்து வெளியிட்டவர்

**செ. தங்கமுத்துக் கவுண்டர் அவர்கள்**

கோடங்கிபட்டி

கம்பாலபட்டி — மெஜரா.

உ

சிவமயம்

# நூன்முகம்

அன்புடையீர்!

ஸ்ரீ வியாசமுனிவரால் அருளிய பதினெண் புராணங்களுள் வைஷ்ணவ புராணமாகிய பாகவதத்துள் இருபத்துநான்கு குருவை உரைத்த அத்தியாயம் அதனுள் அவதூத சம்வாதமென (அதாவது யெதுமகா 'இராசனுக்கு' அத்திரி மகரிஷியின் புதல்வருள் ஒருவராகிய தெத்தாத்திரைய முனிவரர் உரைத்ததை ஸ்ரீ கிருஷ்ண பகவான் உத்தவர்க்கு அருளியதாகவுள்ளது. அதனுள் வேதங்களின் முடிபொருள்களேயுள்ளது அதனைத் துக்கத்தினின்றும் நீங்கி சுகத்தின் அடைவை விருப்பும் மோட்ச விருப்புடையோர்க்கு பெரிதும் பயன்படுமெனக் கருதி யாம் பொழிப்புரை செய்யும்போது கேட்டு அதனல் இன்புற்ற (கோடங்கிபட்டி) செ. தங்கமுத்துக் கவுண்டரவர்கள், அதனை வெளியிட முற்பட்டு (250) ரூபாய் பொருள் உதவி செய்து வெளியிடச் செய்தார்கள். கைமாறு கருதாது கடப்பாடெனச் செய்த நன்றியை நம்மவர்கள் யாவரும் பாராட்டத் தக்கதேயாகும். திருவாதவூரடிகள் திருப்பெருந்துறையில் உள்ள சிவ திருப்பணிகளுக்கு பாண்டியனது பொருளைச் செலவிட்டு அவனை

ந கொடு சுவர்க்கம் ஈனிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளியது போன்றே!

செ. தங்கமுத்துக் கவுண்டரவர்கள் மூவேழ் சுற்றமும் இருமை இன்பமும் எளிதினில் யெய்தி இன்புற்று நீடுழி வாழ்ந்தும் முடிவினில் வீட்டின்பமும் பெறவேண்டு மென எல்லாம் வல்ல அருட்பெருஞ்சோதி தனிப் பெருங்கருணை முழுமுதற் பொருளின் திருவருள் வய மாய் நின்று இதனைச் சத்திய சங்கலபமாகப் பிரார்த்திக் கின்றேன்.

இங்ஙன்
**நித்தியானந்தன்**
வேட்டைக்காரன்புதூர்
பொள்ளாச்சி T. K.

அன்பே சிவம்
அற்றது பற்றெனில்
உற்றது வீடு!

சிவ சிவ என்கிலர் தீவினையாளர்
சிவ சிவ என்றிடத் தீவினைமாளும்
சிவ சிவ என்றிடத் தேவருமாவர்
சிவ சிவ என்றிடச் சிவகதி தாமே!

உ

சிவமயம்

பாகவதத்தில் உள்ள

# அவதூத சம்வாதம்

இருபத்து நான்கு குருவை உரைத்த

அத்தியாயம்!

## இதன் வரலாறு!

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வைகுந்தத்திற்கு எழுந்தருளுங் காலத்தில் உத்தவர் என்பவர் மனோவியாகுலமுடையவராய் ஸ்ரீ கண்ணபிரானது திருவடிகளை வணங்கிப் பத்தி விசுவாசமுடையவராய் முன் நின்றுகொண்டு ஹே! பகவன்! சகலசீவ தயாபரா மாயா தீத வல்லவா, பத்தவஜ்சலா! தேவரீர்! திருவடிகளைப் பிரிந்து! யான் எவ்வாறு உய்வடைவேன் என்று முறையிட்டு துன்புறும்போது, ஸ்ரீ கண்ணபிரான் திருவுளமிரங்கி பிரஹ்மோபதேசம் செய்து அவ்வுபதேசம் நிலைபெறுமாறு அதற்குள்ள நெறியைப் போதகம் செய்யும்போது! அன்பின்மிக்க ஹே! உத்தவா! உனது உண்மை அறிவானந்த வடிவ துரியமாய் விளங்கும் ஆத்ம சொரூபமாய் உள்ள அதனையே குருமூர்த்தமாய் நினைந்து! அறிவு நூற் பயிற்சியால் மலவிட்சேபாதி தோஷங்கள் நீங்கித் தெளிவாகிய சுத்தபுத்தியினால் தீய நெறியிற்செல்லவொட்டாது, மனம் பொறிகளைத் தன்

வயப்படுத்தி! துவம்பத இலட்சியார்த்தமாயுள்ள உனது கூடஸ்த வடிவமாயுள்ள ஆன்மாவே! தத்பத இலட்சியார்த்த வடிவமாயுள்ள பரமான்மாவென நீயே விசாரத்தால் ஆராய்ச்சி செய்து அவ்வாராய்ச்சியால் உண்டாம் உண்மை ஞானத்தால் உனது அநுபவரூபமாய் அறிந்து கொள்வாயாக என்று திருவாய் மலர்ந்து அருள! அப்போது உத்தவர்! அடியேன் எவ்வாறு தெளிவையடைவேன் என! நமது மரபில் முன்னே பதி நான்கு அரசர்களுக்கு முற்பட்ட எதுமகாராஜன் அரசு புரிந்து வருங்காலத்தில் அவ்வரசன் காட்டிற்கு வேட்டையாடச் சென்ற காலத்தில் திகம்பரராய்த்திரிந்த ஸ்ரீ தெத்தாத்திரையரிடத்தில் வினவித் தெரிந்ததோர் அவதூத சம்வாதமென்று ஒரு கதை உளது அதனை நீ கேட்குதி என்று உத்தவர்க்குத் திருவாய் மலர்ந்து அருளியதாம்.

"மன விகற்பம் அகற்றினர் உள்ளுறை
புனித வானந்த போதனை யேற்றுவாம்
தனிநிறை அவதூத சம் வாதநூற்
கினியெரு னின்றியலுரை செய்யவே"

அளிநிறைந்த அறிவின் பெருமையே
ஒளிகொள் மாநுடனுயுருக் காட்டிநற்
களி மறைசை வந்தென்னை யெனக்களித்து
எளிமை தீர்த்த வியல்பினை யேற்றுவாம்.

ஸ்ரீ சற்குருப்யோ நம:

உ

சிவமயம்

## மங்கலம்

பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான்தருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ யெனக்குச்
சங்கத் தமிழ் மூன்றுந் தா!

## ஸ்ரீ கணேசர் துதி

மோகமெனுங் கடல்கடந்து முத்தியெனுங்
கரை காண்பான் முதிர்ந்த நாலாம்
பாகமெனும் மலர்கொண்டு பத்தியெனும்
புனலாட்டிப் பரிந்து சாற்றி
சோஹமெனப் பாவித்துத்துரியமெனும்
விளக்கேற்றிச் சோகம் நீங்கி
ஆகமெனுங் கோயிலின்கண் அறிவென்னுங்
கணபதிக்கே அன்பு செய்வாம்!

## ஸ்ரீ முருகன் தோத்திரம்

அருவமும் உருவுமாகி அநாதியாய்ப் பலவா யொன்ருய்
பிரஹ்மமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகிக்
கருணைகூர் முகங்களாறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே
ஒரு திருமுருகன் வந்தாங்குதித்தனன் உலகமுய்ய!

## நூல்

### பாகவதம் இருபத்துநான்கு ஆசிரியரை உரைத்த அத்தியாயம்

# அவதூத சம்வாதம்

மூலமும்

## நீலகண்டீய உரை விளக்கமும்

(அவதாரிகை)

### தெத்தாத்திரைய முனிவரரை யெதுமகாராஜன் வினுதல்

1. தீதிலன்! மகிழுந்தெத் தாத்திரேய னென்றுலகமெல்லாம்
ஓது! அவதூத வேடத்தொரு வனையெதுமுன் கண்டு!
நீதிசெய்! அறம்! பொன்! காமம்! நினைந்திலை சிறிதும்! [இன்பம்
ஏதினி லடைகின்றுய்என! முனி இசைக்கலுற்ருன்!

**நீலகண்டீய உரை விளக்கம்**:—தீதிலன்! மகிழும் தெத்தாத்திரேயன் என்று உலகமெல்லாம் ஓது = மும் மலதோஷங்களின்றிய குற்றமற்ற, நிரதிசய பரமானந்த சொரூபத்தில் நிலைபெற்று அதில் இரமித்துக் கொண்டிருக்கும் தெத்தாத்திரேயன் என்ற நாமமுடைய மனனசீலன் என்று! பிரஹ்மவேத்தாக்களாகிய பெரியோர்களால் விதந்தோதப்பட்ட! அவதூத வேடத்து ஒருவனை = நிருவாண நிலையினைத் தரித்துள்ள ஒப்பிகந்த பெரியோனை! யெதுமுன் கண்டு = யெதுமகாராஜன் பார்த்து! நீதிசெய் அறம் = ஒழுக்கத்தை வழுவாது செய்யும் ஆச்சிரம தருமங்களையும்! பொன் காமம் = அதனலுண்டாம் பொருளினையும்! பொருளால் வரும் இன்பத்

தினையும்! சிறிதும் நினைந்திலை = ஒரு சிறிதாகினும் நினைந்தனை இல்லை! இன்பம் நீ ஏதினில் அடைகின்றுயென = பரமானந்தமாகிய பெரும் பேற்றினை நீவிர் யாது உபாயத்தால் அடைந்துளீர் என்று கேட்க! முனி இசைக்கலுற்ருன் = மனன சீலரான தெத்தாத்திரையர் கூறத் தொடங்கினுர்!

விசேட உரை :—யெது மகாராஜனென்பவன் வேட்டைக்காகக் காட்டினில் சென்றபோது அவ்வடவியின் கண் திகம்பரராய்த் திரிந்துள்ள தெத்தாத்திரைய முனிவரரைக் கண்டு அமிர்தமுண்ட வொருவன் அமுதமயமே யாவனன்ருே அது போன்று பிரஹ்ம சொரூபத்தையே நினைந்தவன் அந்தப் பிரஹ்ம சொரூபமே யாவனல்லவா ஆகலின் அம்முனிவரர் முகமானது பரமானந்தவடிவமாயுள்ள தேஜஸ் விளங்கியது அதனையெது மன்னன் தன்னுள் ஆராய்ச்சி செய்தான். இவ்வாறு விளங்கும் ஒளியானது சதுரங்க சேனைகள் சூழ்ந்து வர அரசு செலுத்தும் நமக்கும் இத்தகைய இன்பமோ அல்லது ஒளியின் விளக்கமோ இன்று இம்முனிவர்க்கு அறம் பொருளின்பம் என்னும் இம்மூன்றினிடத்துமோ ஒரு சிறிதும் பற்றின்றென்பது திகம்பர வடிவத்தால் விளங்குகின்றது. இனி இந்த நிரதிசய இன்பமாகிய பெரும் பேற்றினை எவ்வித உபாயத்தாலடைந்தனரென விசாரித்து யாமும் அதனையடைவதற்குள்ள சாதனம் சம்பாதிப்போமென நினைந்து! ஹே சுவாமின்! தாங்கள் அறம் பொருள் இன்பமென்பனவற்றிலோ ஒரு சிறிதளவும் பற்றுக் கோடின்றென்பது உங்களது வேடத்தாலேயே யான் தெரிந்துளேன்! அதனை நீங்கிய நீவிர் இந்நிரதிசயவின்பத்தினை எவ்வித உபாயத்தாலடைந்துளீர்கள் என்பதை நான் உய்வடைய வேண்டிய அதனை நன்ருக

உணர்த்தியருளல் வேண்டுமென்று கேட்க இனிமேல் வருமாறு முனிபுங்கவர் கூறத்தொடங்கினர்.

(அவதாரிகை)

தாமடைந்த பேரானந்த மிவற்ருற் பெற்றதெனத், தொகுத்துக் கூறியது

2. தரை-புனல்-கனல்-கால் வானம்த பனன் வெண்டிங்கள் [வாரி
வரை யுறை யரவு மான்கான் வருகரி பதங்க மீனம்
முரலளி கணை யெய்கின்ருேன் மொழிதருங் குமரி தேனீ
யுரை தரு புறவு தாசியூன் கவரன் றிருகம்.

நீலகண்டீய உரை விளக்கம் :--தரை, புனல், கனல், கால்,வானம் = நிலம், நீர், நெருப்பு, வாயு, ஆகாயம்! தபனன், வெண்டிங்கள் = சூரியன்! சந்திரன்! வாரி = கடல்! வரையுறை அரவு = மலைப்பாம்பு! மான், கான் வரு கரி = மான் காட்டு யானை! பதங்கம் = விட்டில் பறவை! மீனம் முரல் அளி = மீன்! இசைபாடும் வண்டுகள்! கணையெய்கின்ருேன் = பாணங்களால் அடிக்கின்ற வேடன்! மொழிதருங் குமரி = சொல்லா நின்ற குமரிப் பெண்! தேன் ஈ = தேன் ஈக்கள்! உரைதரு புறவுதாசி = சொல்லா நின்ற புருவும், தாசியும் (கணிகை மாது) ஊன்கவர் அன்றில், நாகம் = தசையை உண்ணும் அன்றில் பறவை! பாம்பு!

விசேட உரை:—பிருதிவி! அப்பு, தேயு, வாயு, வான், சூரியன்! சந்திரன், கடல், மலைப்பாம்பு, மான், காட்டு யானை, விட்டில் பறவை, மீன், இசைபாடும் வண்டுகள் பாணங்களைக் கொண்டு பறவைகளைக் கொல்லும் வேடுவன், சொல்லா நின்ற பழிச் சொல்லைக் காக்கும் குமரிப் பெண், தேனீக்கள் சொல்லா நின்ற புருக்கள், தசையை உண்ணும் அன்றில் பறவை! நாகம்!

## இதுவுமது

உறைந்த நூற்சிலம் பிமைந்த னூதுவண் டெடுத்த கீடஞ்
சிறந்தன விவை நாலாறுஞ் சிந்தையிற் குருவென்றுக்கி
மறந்தரு மிவைகடீ தாமற்றவை நலனுமென் றிங்
கறிந்தன னின்ப முற்றேனவ் வகை யரச கேண்மோ.

**நீலகண்டைய உரை விளக்கம் :—உறைந்த நூற்சிலம்பி** = தன்னுலேயே தனக்கு அமைத்துள்ள வலையின் கண் வசிக்கும் சிலந்திப்பூச்சியும்! **மைந்தன்** = சிறிய பாலகன்! **ஊதுவண்டு எடுத்த கீடம்** = ரீங்காரம் செய்யும் பிள்ளைக் குழவியானது தன்வடிவாகும் பக்குவங் கண்டெடுத்து வந்த புழுவும்! **சிறந்தன இவை நான்காறும்** = சிறப்பினை யுடையதான இந்த இருபத்து நான்கினையும்! **சிந்தையிற் குருவென்றுக்கி**/எனது கருத்திற் குருவாகக் கொண்டு! **மறந்தரும் இவைகள் தீதாம்** = இவைகள் தீங்கினை விளைவிக்கும் ஆதலான் தீதென்றும்! **மற்றவை நலனு மென்றும்** = ஒழிந்த தீங்கில்லாதென நல்லதெனவும்! **இங்கு அறிந்தனன் இன்பமுற்றேன்** = இங்கு இவைக ளிடத்து அறிந்துளேன். ஆகலின் அதனுலே யான் உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள ஆன்ம சொரூபத்தில் நிலைபெற்று இரமித்துக்கொண்டிருக்கின்றேன்! **அவ்வகை** = யான் அடைந்த நெறி இதுவென! **அரச கேண்மோ** = ஹே எதுமகா இராஜனே நீ ஏகாக்கிர சித்தனுய்க் கேட்குதி!

விசேட உரை:—தனக்குத்தானே யமைத்துள்ள வலையின் கண் தங்கும் சிலந்திப் பூச்சியும் சிறிய குழந்தையும் இசைபாடும் பிள்ளைக் குழவியானது தன் வடிவாக்கிக் கொள்ள அதற்குரிய பக்குவங் கண்டெடுத்து வந்த புழுவும் ஆகிய சிறப்பமைந்துள்ள இந்த இருபத்து நான்கினையும்! எனது கருத்திற் குருவாகக் கொண்டு

இவற்றினிடமாயுள்ள நல்லன இவை! தீயன இவை என அறிந்து நல்லன கொண்டு தீயன நீக்கியுள்ளேன் ஆகலின் அதனாலே யான் உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள ஆன்ம சொரூபத்தில் நிலைபெற்று இரமித்தலையுடையவனாக இருக்கின்றேன். நான் அடைந்த நெறி இதுவென ஹே! எதுமகாராஜனே நீ ஏகாக்கிர மனமுடையவனாய்க் கேட்குதி!

(அவதாரிகை)

## பூமியினது குணத்தால் அறிகின்றவை இவையெனல்

4. பரிவில் வெட்டினும் கல்லினும் பயன் பொறுத்தளித்தும
புரியு நல்ல கைமாறெதிர் பொருந்திடாதசலத்
தருவி நீரடவிக்கனி முதலிய வளித்து
மிருதிறத்தையு மெனக்கறிவித்த தித்தரையே.

நீலகண்டிய உரை விளக்கம்:—பரிவில் வெட்டினும் கல்லினும்=அன்பின்றியே வெட்டிப் பிளந்த போதிலும் அல்லது கீழ்நோக்கித் தோண்டிய போதினும்! பொறுத்து=அதனையும் சகித்துக் கொண்டே! பயன் அளித்தும் = கடப்பாடெனக் கைமாறு நோக்காது! அவர்களுக்கு பயன்களையளித்தும்! அசலத் தருவி நீர் = மலைகளில் நின்றும் ஒழுகும் அருவிச் சலங்களாலும்! அடவிக்கனி முதலிய அளித்து=வனங்களில் உண்டாம் கனி முதலியன தந்தும்! எதிர் பொருந்திடாது=பதிலுபகாரம் விரும்பாமலே! நல்ல கைமாறு=நன்மை தரும் உபகாரங்களை! புரியும்=செய்து கொண்டும். இரு திறத்தையும்=தன்னிடத்து பிறரால் வரும் தீங்கினை பொறுத்துக் கொள்ளலும்! அவர்களுக்கு உதவியைச் செய்தலும் ஆகிய இவ்விரண்டு குணங்களையும்! எனக்கு அறி

வித்தது இத்தரையே = எமக்கறியச் செய்துள்ளது இந்தப் பிருதிவி! என்றறிக.

விசேட உரை :—அன்பின்றியே வெட்டிப் பிளந்த போதினும்! அல்லது? கீழ்நோக்கித் தோண்டிய போதினும்! அதனையும் சகித்துக் கொண்டே கைமாறு நோக்காது கடப்பாடென! அவர்களுக்குப் பயன்களையளித்தும்! மேலும் மலைகளில் நின்றும் ஒழுகும் அருவிச் சலங்களால் வனங்களிலுண்டாம் கனி முதலியன தந்தும்! பதில் உபகாரங்கருதாது! நல்ல உபகாரங்களையே செய்து கொண்டும் தனக்குப் பிறரால் வரும் தீங்கினைப் பொறுத்துக் கொள்ளுதலும்! மேலும் அவர்களுக்கு உதவியைச் செய்தலும் ஆகிய இவ்விரண்டு குணங்களையும் எமக்கறியச் செய்துள்ளதால் இந்தப் பிருதிவியும் எமக்குக் குருவாயிற்று என்றறிக.

(அவதாரிகை)

நீரினது குணத்தாலறிகின்றவை
இவையெனல்

5. களி கொளும் முருநினைக்கினுங் காண்கினு நலஞ்சேர்ந்
தொளி கொளும் பெயர் வழுத்தினு மன்னவ ருளத்தை
யளி கொளும் புனிதம் பெறவாக்கலு மருந்தன்
டெளிவு மப்புவினிடத்தினின் றறிந்தனன் றெறிக்கில்

நீலகண்டீய உரை விளக்கம்:—களிகொளும் உருநினைக்கினும் = கங்கை என அதனது உருவத்தை நினைத்த போதினும் மகிழ்வை யுண்டுபண்ணும்! காண்கினும் நலஞ்சேர்ந்து ஒளிகொளும் = கண்டபோதும் நன்மைகள் யாவும் ஒன்று சேர்ந்து ஒளியமைந்த பெயர் வழுத்தினும் = கங்கை என்ற திருநாமத்தினைத் துதி செய்யினும்! அன்னவர் உளத்தை = அவர்களது! உள்ளத்

தினை. அளிகொளும் = தனது கிருபையால். புனிதம்பெற ஆக்கலும் = மலவிட்க்ஷேப தோஷங்களை ஒழியுமாறு செய்து தூய்மையாக்கலும்! அருந்தண் = அரிய தண்ண ளியினையும்! தெளிவும் = சாக்கடை நீர் முதலிய தன்னிற் கலப்பினும் அதனைத் தன்வயமாக்கித் தூய்மையுடைய தாயும்! அப்புவினிடத்தினின்றும் = நீரின் கண்ணே யுள்ள இவைகளை! அறிந்தனன் = எமது விவேகத்தால் உணர்ந்து கொண்டனன்! தெரிக்கில் = சொல்லு மிடத்து!

விசேட உரை:—தன்னைத்தியானஞ் செய்தவர் தோத் திரம் செய்தவர்களது உள்ளிலும் வெளியிலும் தூய்மை செய்தும் அழுக்குப்படியாமல் அந்நீரானது தெளிவினை யுற்றிருத்தல் போன்றே தம்மை ஒருவர் நினைந்தாலும் கண்டாலும் துதித்தாலும் அவர்கள் அந்தக் கரணம் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்றுவித மலங் களும் நீங்கப் பெற்றுப் புனிதராகுவதன்றித் தானும் அந்நிலையினின்றும் கெடாத நிலையை யுடையதும், அரியதண்ணளியும் சாக்கடை நீர் முதலியன தம்மிற் கலப்பினும் அதனைத் தன்வயமாக்கித் தூய்மையுடையதா யும் உள்ள இவைகளை எமது விவேகத்தால் உணந்து கொண்டனன்! சொல்லுமிடத்து.

(அவதாரிகை)

அக்கினியினுற் பெறுகின்றவை யிவையெனல்

6. இருந்திராக மோடியம்பரும் வெறுப்பற வெறிந்து
பொருந்து;கின்றன யாவையும் புசிப்பது மெவரும்
விரைந்து வந்தணுகா வகை வீற்றிருப்பது வுந்
திருந்துகின்ற நற்காந்தியும் பெற்றனன் றீயின்

நீலகண்டீய உரைவிளக்கம்:–இயம்பரும் இராகமொடு வெறுப்பும் அற எறிந்து=சொல்லுதற்கரிய இச்சை

துவேடம் என்பவை முழுதும ஒழியுமாறு செய்து இருந்து பொருந்துகின்றன = இருந்த இடத்திலேயே தன் முன்பு கிடைத்துள்ள! யாவையும் = அறுசுவையின், குணம் குற்றம், அபத்தியம், பத்தியமெனக் கழிக்காமல் யாவையுமே! புசிப்பதும் = சகிப்பாகவே புசித்தலும். எவரும் விரைந்து வந்து = எவ்வித குணமுடையவரும் தடையின்றி முன்வந்து! அணுகாவகை = நெருங்காவண்ணம் வீற்றிருப்பதும் = பெருமையுடன் இருப்பதும்! திருந்துகின்ற நற்காந்தியும் = பிரகாசம் செய்யும் நல்ல ஒளியினையும்! பெற்றனன் தீயின் = அக்கினியாலேயே யான் இவற்றினையடைந்துளேன்!

விசேட உரை :—சொல்லுதற்கரிய இச்சை துவேஷமென்பவை! முழுதும் ஒழியுமாறு செய்து தாமிருந்த இடத்திலேயே தன்முன்பு கிடைத்துள்ள அறுசுவையின் குணங்குற்றம், அசுத்தம், சுத்தம், அபத்தியம், பத்தியமெனக் கழிக்காமல் இது சந்தண மரம் எட்டி மரமெனவும் கிடைத்ததை நீக்கிக் கிடையாதவற்றில் தாவுதலும் எவ்வித குணமுடையோரும் தடையின்றி முன் வந்து நெருங்காவண்ணம்! பெருமையுடன் இருப்பதும்! பிரகாசஞ் செய்யும் நல்ல ஒளியினையும்! அக்கினியால் இவற்றினை யான் அடைந்துளேன்!

(அவதாரிகை)

(வாயுவினாற் பெருகின்றவை இவையெனல்)

7. வளைந்த காதலெவ் விருப்படைந்தா ரெனவரினுஞ்
தெளிந்த யோகிய ருயிர்க்கவை யில் லெனத் தெளிந்தேன்
விளைந்த வாசமும் விளம்புதுர்க்கந்தமு மேவி
யளைந்து வந்து மக்குணம் பெருவநில னென்றறிந்தேன்.

நீலகண்டீய உரை விளக்கம் :—விளைந்த வாசமும் = பல திரவியங்களினின்றுண்டாம் நற்கந்தமும்! விளம்பு

துர்க்கந்தமும் மேவி=வெகு விதமாய்ச் சொல்லும் துர்க் கந்தமும் மிசிரகந்தம்=மேவியளைந்து வந்தும்=பொருந் தும் படியாகக் கலந்து வந்தாலும்! அக்குணம்பெரு அநிலனென்று = அந்த மூவித குணங்களையும் பற்ற மாட்டாது வாயுவென்று! அறிந்தேன் = நான் தெரிந் துளேன்! அது போன்றே! வளைந்த காதல்=சூழ்ந் துள்ள மனைமக்கள் பொருள்களின் இச்சையால்! எவ் விருப்படைந்தாரென வரினும் = அப்பொருள்களில் ஆசையுடையார் போன்றே வந்தாலும்! தெளிந்த யோகி யர் = உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள ஆன்மாவே நாமெனக் குருசாத்திர மூலமாய் அறிந்துள்ள மேலோ ரது! உயிர்க்கு = ஆத்மாவிற்கு! அவை இல்லெனத் தெளிந்தேன் = அவைகளிற் பற்றமாட்டாவென்பதை எனது அறிவிற்கு புலப்படத் தெளிந்தனன்!

விசேட உரை :—நற்கந்தம் துர்க்கந்தம் மிசிரகந்தங் களை வாயுவானது கலந்து வரினும்! அக்குணங்களிற் பற்றுதலே போல நிரதிசயானந்த சொரூபத்தில் இரமித் தலையுடைய யோகியரது உள்ளம்ஏடணையிற் கலந்ததாய் இருப்பினும் மனைமக்கள் பொருள்கள் என்ற விருப்பம் அவ்வான்ம சொரூபத்தைப் பற்றமாட்டா. நெருப்புண் டான அடவியின் கண் மிருகங்கள் முதலியன அதனை யடையமாட்டாது. அது போல ஞானமயனை இவைகள் யாவும் பற்றமாட்டாதென அறிந்துளேன்!

(அவதாரிகை)

ஆகாயத்தாலறிகின்றவை இவையெனல்

8. கண்ணகன்றிடு மிடத்துள்வான் கடத்துள்வா னெனவான்
எண்ண நின்றன போக வொன்று யியைந்ததனுற்
பண்ணுகின்றதன் மாயை யிற் பற்பல படைப்பாய்
நண்ணுகின்றதும் பிரஹ்ம மொன்றென்று நன்கறிந்தேன்.

நீலகண்டீய உரை விளக்கம் :— கண்ணகன்றிடும் இடத்துள் = இடமகன்று எங்கும் வியாபகமாயுள்ள! வான் = மகாகாயமும்! கடத்துள்வான் = குடத்தினுள்ளே இருக்கும் ஆகாயமும் (அதாவது கடாகாயமும்) என வான் எண்ண நின்றன! = என்று ஆகாயங்கள் இரண்டென எண்ண நின்றன! போக ஒன்றாய் இயைந்ததனால் = அக்கடமாகிய உபாதி நசித்தால் அக்கடாகாயமானது! மகாகாயத்தோடு ஏகமாய்! அபேதமானதால்! அதுவே போன்று பிரஹ்மம் பண்ணுகின்றன = கூடஸ்தவடிவ பிரஹ்மமும் நாமரூபவடிவமாயுள்ள சக சீவபரங்களைத் தோற்றுவிக்கும்! தன் மாயையின் பற்பல படைப்பாய் = தனது மாயா வடிவ சத்தியால் பற்பல உபாதிகளைத் தோற்றுவித்து நண்ணுகின்றதும் = அவ்வுபாதிகளிற் பொருந்தி பல சீவத்துவ ரூபமாகத் தோன்றியதும்! நன்கு அறிந்தேன் = இவைகள் உபாதி நீங்கின் அப் ஒன்று என்று = பரம்பொருள் ஏகமாய் ஒன்றேயாமென நான் ஐயந்திரிபற நன்கறிந்துளேன்!

விசேட உரை:—கடாகாய மகாகாயத்திற்குதாரணம்.

"சிவனுடீசன் கூடத்தன் பிரஹ்மமென்னச் சித்து நான்காம்
குடநீர் கதுவுறும் வெண்மீன் வான்!
தூவு பனிநீர் பிம்ப வநுமிதாகாசம் சொல்கடா
வச்சின்னு காசமொடு மாவான்!

மேவும் இவை யவற்றினுக்குத் திட்டாந்த முறையாம் எனவும்.

"விண் ஒன்றை மகாவிண் என்றும் மேக விண் என்றும் பாரில்! மண் ஒன்று கடவிண் என்றும் மருவிய சல விண் என்றும்! எண்ணுங் கற்பனை போல் ஒன்றே எங்குமாம் பிரஹ்ம மீசன்! நண்ணுங் கூடஸ்தன் சீவன் நான்கு சைதன்யம் ஆமே" என்று கைவல்யமுங் கூறும்! ஆகலின் ஆகாயம் போன்றே வியாபகமாய் அதிசூட்சு

மாய் அசங்கமாயுள்ள கூடஸ்த வடிவப் பிரஹ்மத்தை அறிவதற்கு ஆகாய திருஷ்டாந்தமானது மிகமிகச் சிறந்ததாம். கடம் நசிக்கக் கடத்தின் உள்ளிருந்த ஆகாயமானது மகாகாயத்திற்கு வேருகாதது போன்று சீவர்களது அறியாமை (அல்லது அந்தக்கரணம்) ஆகிய உபாதிகள் நசித்தால் கூடஸ்தவடிவ ஆன்மாவும் பிரஹ்மமும் ஏகமாய் ஒன்றேயாமென்பது ஆகாய திருஷ்டாந்தத்தால் நான் நன்கு அறிந்துளேன்! என்றனர் முனி புங்கவர்!

## இதுவுமது

9. உறை வுரு விடமின் றெனவுறையும் வானென்ருற்
குறை வுரு வகைகண்டதிற் கூறு மொன்ருலும்
மறை வுரு தொருகுறையு மன்னுது மற்றெங்கும்
நிறை வரு தவை நிகர்த்தென நினைத்தனன் பிரஹ்மம்.

**நீலகண்டிய உரை விளக்கம்** :—வான் உறைவுருவிடம் இன்றென உறையும் = ஆகாயமானது எங்கும் வியாபகமாய் உள்ளதால் அது வியாபியாத இடமே இல்லை எனும்படி நிறைந்துள்ளது. ஒன்ருற் குறைவுரு வகை கண்டு = யாதொன்றினுலும் மாறுபாடடைய மாட்டாது எனத் தெரிந்து. அதிற் கூறும் ஒன்ருலும் = அவ்வாகயத்தினின்றும் தோற்றும் வாயு, நெருப்பு, நீர், நிலம் என்னும் நான்கு பூதங்களினுலும்! மறைவுரு = மறைவுபடமாட்டாது! ஒரு குறையுமன்னுது = யாதொரு குறைவுபாடும் பொருந்தாது. நிறைவருது = எவ்விடத்தும் பூரணத்தன்மை குறையாமலும் உள்ள. அவை நிகர்த்தது பிரஹமம் = அவ்வாகாயத்தையே போன்றுள்ளது இப்பரம்பொருள் என! நினைந்தனன் = என் உள்ளத்தில் ஓர்ந்தனன்!

விசேட உரை :—ஆகாயமானது, எங்கும் பூரண மாய் ஏனைய நான்கு பூதங்களினுங் கலந்திருப்பினும் அவைகளின் சம்பந்தமின்றியே இருத்தல் போன்று அகண்ட பரிபூரண பரமானந்த வடிவமாயுள்ள பிரஹ்ம மும் இச்சகசீவ பரங்களாகிய நாமரூபங்களோடு கலந் திருப்பினும் ஒன்றையுமே பற்றமாட்டாவென்பதை, நன்கு தெரிந்துளேன்! என்பதற்குதாரணம்! கைவல்யம்

கடமெனும் உபாதிபோனால் ககனம் ஒன்றானாற் போல
உடலெனும் உபாதிபோன உத்தரம் சீவன்முத்தர்
அடிமுடி நடுவும் இன்றி அகம்புறம் இன்றி நின்ற
படிதிகழ் விதேகமுத்தப் பதம் அடைந்திருப்பர் என்றும்
சொல்லிய மகனே எங்கும் சூழ்வெளிஇருக்க மண்ணைக்
கெல்லிய பின்பு தோன்றும் கிணற்றின் ஆகாசம் போலே
ஒல்லையாம் பிரஹ்மம் நூலால் உற்றது போலேதோன்றும்
எல்லையில் நாம் எப்போதும் ஏகம் என்று இருந்துவாழ்வாய்

என்றும் கூறுவனவற்றால் அறிந்து கொள்க.

(அவதாரிகை)

கதிரவனால் தெரிந்துள்ளதிவை எனல்

10. அருவமாம் அறிவானவன் ஆக்கைகள் பலவும்
ஒருவனாகியே உறைகுவன் என்பதை உணர்ந்தேன்!
பரிதிவானவன் ஒருவனேயாய்ப் பலகடத்தின்
மருவுநீர் தொறும் நிழல் பலவாயுறல் மதித்தேன்!

நீலகண்டீய உரை விளக்கம் :—பரிதிவானவன் ஒரு வனேயாய் = பிம்ப வடிவமாயுள்ள சூரியன் ஒருவனே யாகி! பலகடத்தில் = அநேகஞ் சட்டி சால் குட முதலிய வற்றில்! மருவுநீர் தொறும் = பொருந்தியுள்ள நீர்கள் தோறும்! நிழல் பலவாயுறல் மதித்தே = பிரதிபிம்ப வடிவமாயுள்ள சாயைகள் பலவாகத் தோன்றுவதை

நினைந்து! அருவமாம் அறிவானவன் = அசங்க சிதாத் மாவாகிய பிம்பவடிவமாயுள்ள அறிவே = ஒருவனுகியே = ஒன்ருய் இருந்து = ஆக்கைகள் பலவும் உறைகுவன் = உடம்புகள் தோறும் பொருந்தியுள்ள (அவித்தை) அல்லது அந்தக் கரணங்கள் தோறும் பிரதிபிம்ப வடிவமாயுள்ள சீவரூப ஆபாசமாகத் தோற்றும் என்பதை நன்குணர்ந்துளேன்!

விசேட உரை :—பிம்பவடிவமாயுள்ள சூரியன் ஒருவனேயாகி அநேகஞ் சட்டி சால் குட முதலியவற்றிற் பொருந்தியுள்ள நீர்கள் தோறும் பிரதிபிம்ப வடிவமாயுள்ள சாயைகள் பலவாகத் தோன்றுவதை நினைந்து பிம்பவடிவமாயுள்ள அசங்க சிதாத்மாவாகிய அறிவே! ஒன்ருய் இருந்து இச்சட வடிவமாயுள்ள உடம்புகள் தோறும் பொருந்தியுள்ள (அவித்தை) அல்லது அந்தக் கரணங்கள் தோறும் பிரதிபிம்ப வடிவமாயுள்ள சிதாபாசர்களாகத் தோற்றுவதென்பதை! நான் நன்குணர்ந்தேன்!

(அவதாரிகை)

சந்திரனுலறிகின்றவை இவையெனல்

11. திங்கணு டொறும் வளர்தலுந் தேய்தலுந் தெரிக்கில்
அங்கண்மா நிலம் விளக்கும் வெண்கதிர்க்குணமதனுற்
றங்குமோ ரறுவகை விகாரங்களுந் தமியே
னிங்கு நாடினனுடற்கலா லுயிர்க்கிலை யெனவே.

நீலகண்டீய உரை விளக்கம் :— திங்கள் = சந்திரனானவன்! நாள்தொறும் வளர்தலும் தேய்தலும் தெரிக்கில் = ஒவ்வொரு தினமும் வளர்தலையும் குறைதலையும் சொல்லுமிடத்து! அங்கண் மா நிலம் = அழகிய இடமகன்ற இவ்வுலகம் யாவும்! விளக்கும் = பிரகாசிப்பிக்கும்! வெண்கதிர்க் குணமதனல் = வெள்ளிய கிரணங்களின்

குணமாதலால் தங்கும் ஓர் அறுவகை விகாரங்களும் உடம்பின் தர்மமாகிய கருவாய் அமைதல் உற்பவித்தல் வளர்தல்! பருத்தல் சிறுத்தல் மரித்தலென்று உறையும் ஆறுவித விகாரங்களும்! உடற்கலால் = அத் தர்மங்களுக்குத் தர்மியாயுள்ள உடம்பிற்கேயன்றி உயிர்க்கில்லை எனவே உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள ஆன்மாவிற்கு அவைகள் இல்லையென்று! இங்கு நாடினன்! இவைகளால் யான் அறிந்துளேன்!

விசேட உரை :—சந்திரனுனவன்! ஒவ்வொரு தினமும் வளர்தலையும் குறைதலையும் சொல்லுமிடத்து அழகிய இடம் அகன்ற இவ்வுலகம் யாவும் பிரகாசிப்பிக்கும் வெள்ளிய கிரணங்களின் குணமாதலால் உடம்பின் தர்மமாகிய கருவாயமைதல்! உற்பவித்தல்! வளர்தல்! பருத்தல்! சிறுத்தல்! மரித்தல் என்று உறையும் ஆறுவித விகாரங்களும் அத்தர்மங்களின் தர்மியாயுள்ள உடம்பிற்கேயன்றி! உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள ஆத்மாவிற்கு அவைகள் இல்லை என்று இவைகளால் யான் அறிந்துளேன்!

(அவதாரிகை)

இதுவுமது

12. விளங்கு மெய்ப்பொருள் யாக்கை மேவினுமதின் குணங்க
ளுளங் கொடெண்ணிலப் பொருட்கில்லையென்பது மோர்ந்
[தேன்
களங்க மென்பது மதிக்கில்லை கருதுமக் களங்கம்
வளங்கொள் பூமியின் சாயை யென்பாரதை மதித்தேன்.

நீலகண்டீய உரை விளக்கம் :—விளங்கும் மெய்ப்பொருள் = சுவயம்பிரகாச வடிவமாய் விளக்கும் ஆத்மாவானது! யாக்கை மேவினும்! சூக்கும உடம்பாகிய

அந்தக் கரணத்தில் பிரதி பிம்ப வடிவ சிவரூபமாய்ப் பொருந்தியுள்ள போதினும்! அதின் குணங்கள் = அவ் வந்தக் கரண தர்மங்களே! உளங்கொடு எண்ணின் = உள்ளத்தால் ஆராயின்! அப்பொருட்கு இலே என்பதும் = காமக்குரோதாதியாகியுள்ள அந்தக் கரணத்தினது பரிணும வடிவமாயுள்ள தர்மங்கள் அவ்வாத்மாவிற்கு, இல்லே என்பதையும் ஓர்ந்தேன் = ஆராய்ந்து அறிந் தனன்! (அஃதெவ்வாறெனில்! மதிக்குக்களங்கமென்பது இலே = சந்திரனுக்குக்கறை என்பதுவே என்றுமில்லே ! கருது மக்களங்கம் = உலகரால் சொல்லப்படும் முயற் களங்கமோ என்ருல்! வளங்கொள், பூமியின் சாயையா மென்பார் வளம் = பொருந்திய பூமியினது சாயை என்று சொல்லுவர் உயர்ந்தோர்! அதை மதித்தேன் = சந்திர ன து தர்மமன்று என்பதை யான் அறிந்துகொண்டேன்!

விசேட உரை :—பூமியினது தர்மமாகிய அதன் சாயையானது சந்திரனுக்கு இல்லாததே போன்று அந்தகரணபரிணுமமாகிய காமக்குரோத முதலியகுணங் கள் உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள ஆத்மா விற்கு அவைகள் இன்று என்பதை அறிந்துளேன் ஆகலின் வெண்டிங்களால் உற்றதுவாம். இந்நிரு வாண நிலே என்று நீ அறித்து கொள்ளுதி எனக் கூறியதாம்!

(அவதாரிகை)

(சமுத்திரத்தாலறிகின்றவை இவையெனல்)

13. நிறைவிளு டொருங்குறை வற வமைந்த யனிர்வங்
தறையு நீடிரை கூடினு மதின்குணமடையா
துறையும் வாரி கேம்பீரமுந்றென்பதை யுணர்ந்திங்
கிறைவ யானுமக் குணங்களே யுவந்தியைந்தனனுல்

நீலகண்டீய உரை விளக்கம் :—வாரி = கடலானது! நிறைவில் நாடொறும் = எக்காலும் பெருக்கத்தினின் றும்! குறைவு அற அமைந்து = குறைவின்றியே பொருந்தி! அயல் நீர் வந்து அறையும் நீள்திரை கூடி னும் = கங்கை யமுனை முதலிய நீரும் சாக்கடை முதலிய இழிந்த நீர்கள் வந்து அலைகளால் மோதுகின்ற கடல் நீரிற் சேரினும்! அதின் குணம் அடையா = அவ்வயல் நீர்களின் குணத்தினை அடையாது! கெம்பீரம் உற்றுறையும் என்பதை! ஆழமும் பெருக்கமும் பொருந்தியுள்ளதென்பதை; உணர்ந்து = ஆராய்ச்சியா லறிந்து! இங்கு இறைவ = இவ்வுலகிற்கு மன்னனுயுள்ள யெது மகாராஜனே! யானும் அக்குணங்களை = யானும் அத்தகைய பண்பினையே! உவந்து இயைந்தனன் = மகிழ்வோடும் பொருந்தியுள்ளேன்!

விசேட உரை :—ஆல் = அசை! கடலானது தன் நிறைவில் குறைவின்றியும் சாக்கடைகள் ஆகிய அயல் நீர் வந்து கூடினும் அதனது குணங்களைத் தானடையா மலும் தமது பெருமை குறையாமலும் இருக்கின்ற தன்மையினையுணர்ந்து, அக்கடல் போன்றே யானும் எனது பரிபூரண பரமானந்த நிலையின் நிலைபெற்று குறைவின்றியே பொருந்தியும் இந்நாமரூப சகிதமா யுள்ள இச்சடப்பிரபஞ்சம் சேரினும் அவற்றின் தர்மங் களைப் பொருந்தாமலும உண்மை அறிவானந்த வடிவ ஆத்மாவிலேயே இமித்துக் கொண்டே இருக்கின்ற ஒன்மையையடைந்துளேன் என்பதாம்!

(அவதாரிகை)

மலைப்பாம்பினாலறிகின்றவை இவையெனல்

14. உற்றவுற்றவை முயற்சியின் வருந்திடா துண்ணுங்
குற்ற மற்ற நீண்மலையரா வென்பதைக் குறித்திங்
கற்ற மற்ற நல்லறி வினர்க்கிது வழகென்னப்
பெற்ற பெற்றன முயற்சியற்றருந்தினன் பெரியோய்.

நீலகண்டீய உரை விளக்கம் :—குற்றமற்ற = பிழைத் தலின்றிய! நீண்மலை அரா = நீண்டு பருத்த மலைப் பாம்பானது! முயற்சியின் வருந்திடாது = தனது உடல் முயற்சியுற்று வருந்தாமலே! உற்ற உற்றவை = தனது வினைவயத்தால் எது எது தனக்கு முன் வருமோ அதனையே! உண்ணும் = புசிப்பாகக் கொள்ளும்! என் பதைக் குறித்து = என்று சொல்வதைக் கருதி! இங்கு = இவ்வுலகின் கண்! அற்றம் அற்ற நல் அறிவினர்க்கு = அஞ்ஞானம் சந்தேக விபரீதங்களை நீக்கித் தெளிந்த பேரறிவுடையோர்க்கு! இது அழகென்ன = இவ்வாறிருத் தலே தகுதியுடையதாமென்று! பெற்ற பெற்றன = யான் பெற்ற அளவினையே! முயற்சியற்று அருந்தினன் = யாதொரு முயற்சியுமின்றியே புசித்துளேன்! பெரி யோய் = மேன்மை மிக்க அரசனே!

விசேட உரை :—மலைப்பாம்பானது தான முயற்சி யால் வருந்தாமல் இருந்துள்ள இடத்தில் தனது வினை யள வினதாய் வாரா நின்ற புசிப்பினையே புசிப்பதல்லா மல் வேறு யாதொரு வருத்தமின்றிச் சும்மா இருத்தல் போலவே! யானும் எனது வினைவயத்ததால எது கிடைப் பினும் புசிப்பதும் கிடையாதுள்ள விடத்துச் சும்மா இருப்பதும் பெற்றுளேன் மேன்மை மிக்க அரசனே.

(அவதாரிகை)

சுரோத்திரத்தாற் கேடடைந்த மானினுற் பெற்றவை இவையெனல்

15. மடந்தையர் மொழியுங்கான முங்கேட்டு
மன்னவன் மகள் முலை மணந்தான்
கடந்திரி கலையின் கோடு பெற்றுயர்ந்த
கருதருந்தவ னெனக் கேட்டும்
மடந்திகழ் மதிமான் வேட்டுவன் கானம் பகர்
செவி மடுத்தவன் வலைமேற்
கிடந்தன கண்டும் வெவ்விசை கேளேன் கேட்பது
அநாமகீர்த்தனமே

நீலகண்டீய உரை விளக்கம் :—மடந்தையர் மொழியுங் கானமுங் கேட்டு. மன்னவன் மகள் முலை மணந்தான் =பொதுமாதர்களினது இனிமையாய சொற்களையும் இசை பொருந்திய கீதங்களையும் கேட்டு உரோம பாதனென்னும் மன்னனது குமரியினது நகில்களை பொருந்த விவாகம் செய்துளான் (அவன் யாரெனில்) கடந்திரிகலையின் கோடு பெற்று உயர்ந்த கருதருந்தவன் என = கானகத்தில் திரியும் கலைமானினது கொம்பினைப்பெற்றுயர்ந்த நினைத்தற்கரிய பொறிமன முதலிய ஒருமையுற்றவனாகிய கலைக்கோட்டு மாமுனிவரன் என! கேட்டும் = கேள்விப்பட்டும்! மடந்திகழ் மதிமான் = அறிவின்மை மிகுந்த புத்தியினை உடைய மானனது! வேட்டுவன் = வேடன்! பகர்கானம் செவிமடுத்து = குழலினின்றெழும் இசையினை தனது செவியால் கேட்டயர்ந்து! அவன் வலைமேற் கிடந்தன கண்டும் = அவனால் வீசிய வலையின் கண் சிக்கிக் கிடக்கின்ற தன்மையைக் கண்ணினாற்கண்ட நான்! வெவ்விசை கேளேன் கொடிய கானத்தினைச் செவியாற் கேளேன் (பினையான்) கேட்பது

அநாம கீர்த்தனமே = கேட்கத் தக்கது யாதெனின் நிரதிசய வடிவமாயுள்ள கூடஸ்த வடிவப் பிரஹ்மத்தின் கீர்த்தனங்களேயாம்!

விசேட உரை :—சத்த இந்திரியத்தாற் கலைக்கோட்டு மகாமுனிவரர் கணிகை மாதரால் அவர்களது இனிமையான வாசகங்களையும் நல் இசைகளையும் கேட்டதால் மயக்கமுற்று, நாட்டிற்கு வந்து உரோம பாதன் புத்திரியை மணந்துள்ள அதிசயமும் கானகத்தில் உள்ள மான்வேடுவர்கள் குழலூதும் கானத்தில் மயங்கி, அவர்கள் வீசிய வலையின் கண் சிக்குண்டு கிடந்தமையும் நான் கண்கூடாகக் கண்டுள்ளதால் கொடிய கானங்களைக் கேட்பது விரும்பேன் ஆயின் வேறு எதனை யான் கேட்பது எனின், நிராமயம்! நிட்களம்! நிரஞ்சனம்! அத்விதீயம, அகண்டம், அனுமயம், அவிநாசி, அப்பிரமேயம், அபரிச்சின்னம்! என்பனவாய நிரதிசய பரமானந்த பரிபூரண வியாபகமாயுள்ள கூடஸ்த வடிவப் பரம்பொருளின் நாமங்களையே வேதாந்த சிரவணமாகக் கொண்டுளேன்!

(அவதாரிகை)

பரிச இந்திரியத்தாற் கேடடைந்த யானையினுல் அறிந்தது இது எனல்

16. துதி தருவயவர் படுகுழி செலுத்துந்துகளறு
பிடியைபுள்ளுவந்து
மதகரி தழுவி வயவர் கைவசமாய்
வயங்குதல்கண்டு மட்டொழுகும்
ததைமலர் குழலார் தனகிரி தழுவித்
தணப்பரிதாய் மதன் வசமாய்
விதலை யின் மனமா மயக்குறு மென்ன
விடுத்தனன் புணர்ச்சிமற்றன்றே

நீலகண்டீய உரை விளக்கம் :— துதிதரு வயவர் = புகழினைத்தரும் யானையினது பாகர்! படுகுழி செலுத்தும் துகளறும் பிடியை = இழிந்தேறும் கொப்பத்தில் விட்டு இருக்கின்ற குற்றமற்ற பெண்யானையை! உள்ளுவந்து மதகரி தழுவ = மனக்களிப்போடு கூடிய மும்மதங்களையும் உடைய ஆண் யானை தழுவ! வயவர் கைவசமாய் வயங்குதல் கண்டு! பாகர்களது கைவசமாய்ச் சிக்கி அலையும் தன்மையும் பார்த்து! மட்டொழுகும் ததைமலர்க் குழலார் = தேன் சொரிகின்ற மலர் மாலையணிந்த நெருங்கிய கூந்தலையுடைய பெண்களது! தனகிரி தழுவி = நகில்களாகிய மலைகளைத் தழுவி தணப்பரிதாய் = நீங்குதற்கரியதாய்! மதன்வசமாய் = மன்மதன் என்னும் வேடன் கைவசப்பட்டு! விதலையின் மனம் = நடுக்கமுற்ற மனமானது! மயக்குறுமென்ன = மிகுதியும் மயக்கத்தையடையுமென்று! விடுத்தனன் புணர்ச்சி = மாதர்களால் அடையும் பரிசவிடய இன்பத்தினை நீக்கியுள்ளேன்!

விசேட உரை :—யானைக்கொப்பம் அமைத்து அக்கொப்பத்தில் பெண் யானையைப் பாகர்களால் நிறுத்தப் பெற்றுள்ள பாகர் மறைந்திருக்க, அதனைப் பரிசசுகத்தை விரும்பிய ஆண் யானையானது போய்த் தழுவ அதனைப் பாகர்களால் பிடிக்கப்பட்டு, வருந்துவதால் பரிச சுகத்தை விரும்பி மாதர்களது போகத்தை விரும்பும் மனமானது காம விகாரத்தால் அலக்கணுறும் என்று கருதி அஃதை நீக்கியுள்ளேன்!

(அவதாரிகை)

## ரூப இந்திரியத்தால் கேடடைந்த விட்டிற் பறவையால் அறிந்தது இதுவெனல்

17. ஒளி கொளும் விளச்கினழலுருக்கண்டீ
துணவு கொலெனவதிற் சுழன்று
விளிவுறும் பசியபதங்கமுங் கண்டு
வெய்யதித் தொழிலெனக் கருதித்
தெளிவு கொண்முனிவ ராயினுங்காணிற்
சிந்தை கொண்டறு தினமருந்தக்
களிகொளும் கருங்கண் மடந்தையருருவங்
கருத்தொடுங் காண்கிலனம்மா

**நீலகண்டீய உரை விளக்கம்** :—ஒளிகொளும் விளக்கின் அழல் உருக்கண்டு ஈது உணவென=பிரகாச வடிவமாயுள்ள விளக்கினது சிவந்த ஒளியுருவத்தைப் பார்த்து, இது தனக்கு இனிமையான உணவென நினைந்து! அதிற் சுழன்று=அவ்விளக்கின் கண்ணே கறங்கே போன்று சுழன்று அதில் வீழ்ந்து! விளிவுறும் =மரணத்தையடையும்! பசிய பதங்கமும்=பசிய விட்டிற் பறவையையும்! கண்டு=பார்த்தும்! தெளிவு கொள் முனிவராயினும்=விவேகாதி சாதனங்களால் ஆன்மஞன்ம விசாரத்தாற் தெளிவையடைந்துள்ள மனனசீலர்களும், கருங்கண் மடந்தையர்! மை தீட்டிய கண்களையுடைய மாதர்களது! உருவங்காணில் = வடிவத்தைப் பார்க்கில்! சிந்தை கொண்டு அநுதினம் அருந்தக் களிகொளும்=அவ்வுருவினையே உள்ளத்திற் கொண்டு எப்பொழுதும் அவ்வின்பத்தினை நுகர வேண்டுமென்ற மயக்கங் கொள்ளுமாதலின்! வெய்யது இத்தொழிலெனக் கருதி=இச்செயல் கொடியதெனக் கருதி! கருத்தொடும் காண்கிலன்=மனத்தால் நினைந்திலன்!

விசேட உரை :—நேத்திர இந்திரியத்தாற் விட்டிற் பறவையானது விளக்கினது ஒளியினையே உணவென நினைந்து அதனால் அடைந்த கேடின்னதெனவறிந்து மாதர்களது உருவமும் காணின் அதனால் கேடுறுமென உணர்ந்தமையால் அவராற் கேடுறுமென்றெண்ணி நீங்கியுள்ளேன் என்பதாம்.

(அவதாரிகை)

சிங்வு விந்திரியத்தாற் கேடுற்ற மீனாலறிந்ததிதுவெனல்

18. வஞ்ச நெஞ்சினராய்த் தூண்டிலின் வளைந்த
வண்சுவையூன் பெறவடைந்து
துஞ்சுத லடைந்தமீன் குழுக்கண்டு துன்னுமை
வகையெனும் வாயுப்
பஞ்சர மென்றுற் றுடலுறை வதற் காப்ப
சிக்கனற ணிப்பதற் கன்றி
யஞ்சுவை யிவையென்று சையினினைந்தே
யருந்துத லொழிந்தன னடிசில்

நீலகண்டீய உரை விளக்கம் :—வஞ்ச நெஞ்சினராய்த் தூண்டிலின் வளைந்தவண் சுவையூன் பெறவடைந்து = கபடசித்தமுடையோராய் வளைந்துள்ள தூண்டிலின் முள்ளிற் பொருந்திய மிக்க சுவையினையுடைய ஊனைத் தான் உண்ண வந்து! துஞ்சுதலடைந்த மீன் குழுக் கண்டு = அழிந்துள்ளதாயுள்ள மீன் கூட்டங்களைப் பார்த்து! துன்னும் ஐவகையெனும் வாயு = நெருங்கிய ஐந்து வகைப்பட்ட பிராணாதி வாயுக்களும்! பஞ்சர மென்றுற்று = கூடெனவடைந்து! உடல் உறைவதற்கா = இவ்வுடல் போக சாதனமென வைப்பதற்காக பசிக் கனல் தணிப்பதற்கன்றி = உதராக்கினியைச் சாந்தப் படுத்துவதற்காகவே யன்றி வேறு இன்மையால்! அடிசில் அஞ்சுவை இவை என்று = ஆகாரத்தை இவைகள்

இனிமையுடையதென ஆசையின் நினைந்து = கருதி மிகவும் இச்சையுற்று அருந்துதல் ஒழிந்தனன் = உண்பது ஒழிந்துளேன்.

விசேட உரை :—மீன் பிடிப்போர் தூண்டில் முள் ளில் தசையைக் கோத்துப் போடவும் அதனை ஆகார மென நினைந்து மீன் கூட்டங்கள் இரசன விருப்பத்தால் கேடடைந்தது பார்த்து பிராணாதி வாயுக்கள் இவ்வுடம் பிற் றங்கவேண்டி உதராக்கினி தணிக்கக் கருதிக் கிடைத்துள்ள புசிப்பினைப் புசிப்பதே யல்லாமல் நாவுக் கினிமையான உணவுகள் தேடாதொழிந்தனன்!

(அவதாரிகை இதுவுமது)

வண்டினங்களாலறிகின்றவை இவையெனல்

19. வண்டினஞ்சிறிது சிறிதென வலருமலர்
தொறும் வருமுருகு வப்பா
லுண்டன திரிதல் கண்டனன் யானுமுரைக்கிலித்
தொழிலழ கென்ன
வெண்டரு நகரின்பனை தொறுங்குறுகி
யென தொரு கரமிசை யையயங்
கொண்டனன் சிறிது சிறிதென வுவந்து
கொள்சலத் தேற்றிடா தன்றே.

நீலகண்டீய உரை விளக்கம் :—வண்டினம் சிறிது சிறிதென அலரும் மலர் தொறும் = அறுகாற் பறவை கள் கொஞ்சங் கொஞ்சமாக விரியும் மலர்கள் தோறும்! வருமுருகு = ஒழுகுறுந் தேனினை உவப்பால் உண்டன = மகிழ்வோடுங் கூடி உண்டு திரிகின்றதை யான் கண் டனன் = யான் பார்த்துளேன்! உரைக்கில் இத்தொழில் அழகென்ன = இதனைச் சொல்லுமிடத்து இவ்வண் டினத்தின் செய்கை நன்றென்று! எண்டரு நகரின் =

அநேக நகரங்களில் விளங்கும்! மனை தொறுங் குறுகி கொள்கலத்து ஏற்றிடாதுஐயம் = வீடுகள் தோறுஞ் சென்று கொள்கலமின்றி வந்த பிச்சையினை எனதொரு கரமிசை சிறிது சிறிதென உவந்து கொண்டனன் = எனது கரமேபாத்திரமாக ஏற்றுச் சிறிது சிறிதாக மகிழ்வுடனேயே புசிக்கின்றேன்.

விசேட உரை:-- வண்டினங்கள் மலர்களிலுள்ள தேனினை தனது மூக்கால் உழுது அதனல் சிறிது சிறிதாக வரும் தேனினையுண்டு களித்து இசைபாடித் திரியுங் கணக்கே போன்று! யானும் வீடுகள் தோறும் கரபாத்திரப் பிச்சையாய்க் கிடைத்த உணவினை உண்டு மகிழ்வோடுங் கூடியவனுகத் திரிகின்றேன் என்பதாம்!

(அவதாரிகை)

(கந்தேந்திரியத்தாற் கேடடைந்த சுரும்பினு)
(லறிந்த திஃதெனல்)

20. ஒருமறை மலரையுவந்து மென்முருகுண்டுறை
தருமொரு சுரும் பிரவில்
விரியிதழ் குவிய மலரகப்பட்டு
விளிந்தது கண்டொரு நாளுங்
கருதிய நகரி லொரு மனை யுறைந்து
கவின்பெறு முணவு வந்தருந்தேன்.
மருமலர் மகுட கோடிகளிடறு
மலர்புரை தருபத யுகத்தோய்!.

நீலகண்டீய உரை விளக்கம் :—மருமலர் மகுடகோடிகள் =வாசனை பொருந்திய வெற்றி மாலையணிந்த அநேக கிரீடங்களை இடறும் = இடறுகின்ற! மலர் புரை தரு பதயுகத்தோய் = தாமரைமலர் போன்ற பாதங்களையுடைய எதுமகாராஜனே! ஒரு மறைமலரை உவந்து =

தேன்மிகுதியுள்ள ஓரு தாமரை மலரினை விரும்பி! மென் முரு குண்டு=மிருதுவான மணத்தினைக் கிரகித்துக் கொண்டு! உறைதரும் ஒரு சுரும்பு=அதிலே தங்கிய ஒருவண்டானது! இரவில் விரிஇதழ் குவிய=இரவின் கண் விரிந்த இதழ் குவிந்த உடனே! மலர் அகப்பட்டு விளிந்தது கண்டு=அம்மலரின் உள்ளே அகப்பட்டு மடிந்தமை பார்த்து! ஒரு நாளும் கருதிய நகரில்=ஒரு நாளாயினும் நினைத்த இடங்களிலுள்ள! ஒரு மனை உறைந்து=ஓர் மனைகளில் இருந்து கொண்டு! நான் கவின்பெறும் உணவு உவந்து அருந்தேன்=அழ கமைந்த அறுசுவை உணவுகளை இனிமையென நான் புசித்திலேன்!

விசேட உரை:—ஒரு வண்டானது, வாசனையை விரும்பி, உதய முதல் சூரியன் மறையும் வரை அதிலுறைந்ததால் மலர் குவிந்துள்ளதால் அதில் மடிந் தமை கண்டுளேன் ஆதலால்—யானும் ஓர் ஊரிலே ஒரே மனையில் நிலையாயிராமல், வாயிலில் நின்றபடியே வினைக்கீடாய் வரும் புசிப்பினையே யேற்றுப் புசித்துத் திரிகின்றேன்.

(அவதாரிகை)

சத்தாதி முதலிய குணங்களொவ்வொன்றினுற் கேடுற்றுயிர்களிறக்குமாயின அவ்வைந்துமோரிடத்துச் சேருமாயினெவ்வாறுய்வதென வியந்துரைத்தல்.

வேறு

21. முந்தமே யொலியாதியி லொருகுண முன்னிப்
பந்தமோ டிடறுற்றிறந்தன பல வொன்று
லைந்துசேர் குணங்களு மொருங்காசை யினடைந்தோ
ருந்துபோ நெறியுண்டுகொ லோமதித்துரைக்கில்

நீலகண்டீய உரை விளக்கம்:—முந்தமே ஓலியாதியில் ஒரு குணம்=நாம் முன்னர்க் கூறிவந்த! ஓலியாதியில் =சத்த பரிச ரூபரசகந்தமாகிய இவ்வைந்து விஷயங்களில்! ஒரு குணம் உன்னி=ஒரு விஷயத்தை இச்சித்து பந்தமோடு இடறுற்றிறந்தன=பற்றுக் கோடாயுள்ள தனது இனத்துடனே துன்பமுற்று அழிந்தன! பலவென்றால்=அநேகமேயானால் ஐந்துசேர் குணங்களும் =ஐந்து புலன்களால் நுகரும் ஐந்து விஷயங்களையும் விரும்பி! ஆசையின் ஒருங்கடைந்தோர்=இச்சையால் ஒருங்கே அடையப் பெற்றோர்! உய்ந்துபோம் நெறி உண்டு கொலோ மதித்துரைக்கில் = பிழைத்துப் பேரின்பமாகிய பெரும் பேறு பெற்றுய்யும் நெறி உண்டாகுமோ ஆராய்ந்து சொல்லுமிடத்து!

விசேட உரை :—ஒவ்வொரு புலனால் விரும்பப்பட்ட ஒவ்வொரு பிராணிகளும் கேடடைந்துள்ளதேயாயின்! ஐந்தும் ஒருங்கேயுள்ளதாகிய மாதர் போகம் விரும்பினால் ஒருவன் எவ்வித துன்பங்களை யடையானென வியந்துரைத்ததாம் இதற்குதாரணம்! பொய்யாமொழி கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணே உள! என்பனவற்றாலறிக,

(அவதாரிகை)

(வேடனுலறிகின்ற குண மிஃதெனல்)

22 பம்பிரும் பொறிவழி மனம் பறந்துருதடக்கி யம்பு
செய்ததின் கோணறுத்திருத் தின்னவன் போல்
வெம்பு மைம்புலன் வழி மனம் விரும்புதல் வெறுத்துக்
கப்பமில் லறிவாம் பொருளறிந்தனன் கருத்தால்

நீலகண்டீய உரை விளக்கம் :—பம்பு இரும்பொறி வழி =நெருங்கியுள்ள பல துன்பங்களுக்கு ஏதுவாயுள்ள

ஐந்து பொறிகளின் வழியே! மனம் பறந்துருது = மன மானது விடயங்களிற் சென்று மொத்துண்டு திரும்பா வண்ணமாய்! அடக்கி = தன்வயப்படுத்தி! அம்பு செய்து = அம்பினை வில்லினிடமாகப் பொருத்தி! அதின் கோண் அறுத்து = மனத்தினது வளைவு நீக்கி! இருத்து இன்னவன் போல் = அந்த இலட்சியத்தில் செலுத்தும் வேடனே போன்று யானும்! வெம்பும் ஐம்புலன்வழி = கலக்கத்தினை உண்டு பண்ணும் ஐந்து இந்திரியங்களின் வழியில்! மனம் விரும்புதல் வெறுத்து = என் மனமா னது இச்சித்துச் செல்லவொட்டாமற்றடுத்து! கம்பமில் பொருள் அறிவாம் = அசைவற்று இருக்கும் பரிபூரண பரமானந்த வடிவ இலக்ஷியமாகிய கூடஸ்தவடிவ ஆத்மாவில்! கருத்தால் அறிந்தனன்! எனது உண்மை ஞானத்தால் அறிந்து கொண்டேன்!

விசேட உரை :—ஒரு வேடனானவன் வில்லின் கண் அம்பு சேர்த்து ஓர் பறவையின் மீது இலக்கு வைத்து, தனது பொறியின் வழி புலன்களும் மனமும் வெளிச் செல்லாவொட்டாது இலக்கியத்தில் நிறுத்தியதே போன்று! யானும் எனது புலன்களும் மனமும் வெளிச் செல்ல ஓட்டாமற்தடுத்து ஆத்ம வடிவ இலக்ஷியத்தில் நிறுத்தியுள்ளேன்! இதனை இவ்வேடனால் அறிந்துள் ளேன் என்பதாம்!

(அவதாரிகை)

கன்னிகையாலறிகின்றவை இஃதெனல்

23. தாயுந் தந்தையும் வேற்றொரு நகர் வயிற் சார்நாள்
நேயமான தன் மணத்திற நேரதாய் நிகழ்த்த
மேயு சிருற வோர்க்குண வருத்துதல் வேண்டித்
தூய தார்மொழிற் குமரி நெற்குத்து தறுணியா.

நீலகண்டீய உரை விளக்கம் :— தாயுந் தந்தையும் வேற்று ஒரு நகர்வயிற் சார்நாள் = தாயுந் தகப்பனும் வேற்று நகர் அடைந்த காலத்தில் நேயமான தன்மணத் திறம் நேரதாய் நிகழ்த்தமேயு = தங்கள் உற்றார்கள் தனது விவாகத்தைக் குறித்து தனது மாதா பிதாக்களை நேரில் கேட்டு நிச்சயம் செய்ய வந்திருக்கின்ற! சிர் உறவோர்க்கு = சிறப்புப் பொருந்திய பந்துகளுக்கு. தூயதாம் உணவு அருத்துத வேண்டி = புனிதமாயுள்ள உண்டியை செய்விக்க வேண்டுமென்று கருதி! எழிற் குமரி = அழகிய அக்குமரியானவள்! நெற்குத்தல் துணியா = நெற்குத்த வேண்டுமெனத் துணிவுற்ற வளாய்,

இச்செய்யுள் குளகம்

(அவதாரிகை)

(இதுவுமது)

24. பெரிய கை வளையார்ப்பவர் கேட்கிலிப்பேதை
யுரைசெய் நல்குரவுற்ற வளென்ப ரென்றுணர்ந்தாங்
கரிய கைவளை கழற்றின ளொன்று வைத்ததனுற்
கருதி வெவ்வுரை வருங் கொலென்றுறுகுழக் கடிந்தேன்

நீலகண்டீய உரை விளக்கம்:—பெரியகை வளை ஆர்ப்பு அவர் கேட்கின் = நெற்குத்தும் தனது கையிலணிந் துள்ள வளையல்களின் கலீரென்னும் வளையற் சத்தத்தை வந்த உறவினர் கேட்பாராயின் இப்பேதை உரை செய் நல்குரவுற்றவள் என்ப = இப்பெண் வறுமையுள்ளவள் என்று சொல்வார்கள் என! உணர்ந்து = அறிந்து. ஆங்கு கரிய கைவளை = கரத்தில் உள்ள கரிய வளையல் களை! ஒன்று வைத்து. கழற்றினள் = ஒரு வளையலை நிறுத்தி மற்றவைகள் முற்றும் கழற்றிவைத்தனள், அத

னுல் கருதி உறுகுழு வெவ்வுரை வருங்கொலென்று. கடிந்தனன் = அவள் அவ்வாறு செய்ததை அறிந்து பின் பொருந்திய உறவினரால் வரும் பொல்லாங்கான சொற்கள் வருமென்று அச்சுற்றத்தினரை விட்டு நீங்கியுள்ளேன்.

விசேட உரை :—தாய் தந்தையர் பிற ஊர் சென்ற நாளிலே தன் மணங்கருதி உறுதி செய்ய வந்த உறவினருக்கு உணவளிக்க அரிசி இல்லாததால் நெற் குத்தத் துணிந்த குமரியானவள் நெற் குத்தும்போது கரத்திலுள்ள வளையற் சத்தம் கேட்பின் இவள் வறுமையுற்றவள் என்பர் எனக்கருதி வளையல்களைக் கழற்றினமையை யறிந்து! யானும் உறவினராற்றிய சொற்கள் வருமென்று நினைந்து அவரை நீங்கப் பெற்றுளேன் இக் குமரியால் என்பதாம்.

(அவதாரிகை)

தேன்வண்டின் குணத்தினறிகின்ற
தி:ைதெனல்)

25. துன்ற வைத்த தண்டேனுண் டிழந்து சூழ்ந்தெடுக்க
வொன்று மற்றவரா லுயிருலந்தமை யுணர்ந்து
நன்றறிந்து பற்றெறிந்தவர்க் கொன்றையு நாளைக்
கென்று வைப்பது தீதெனத் தெளிந்தன னிறை.

நீலகண்டீய உரை விளக்கம் :—துன்றவைத்த தண்தேன் உணுது இழந்து = ஒரு தேன் படுக்கும் வண்டானது நிரம்பத் தேடி லாட்டாகச் சேர்த்துவைத்த தெளிந்த தேனினை வேண்டியபோது புசியாமலே அதனை இழந்தது மன்றி சூழ்ந்தெடுக்க ஒன்றுமற்றவரால் உயிர் உலந்தமை = அத்தேனினை முற்றும் யெடுத்துச் செல்ல வந்தவரால் உயிர் இழத்தலையுங் கண்டு அறிந்து

நன்று அறிந்து பற்று எறிந்தவர்க்கு = இதனாலேயுண்டாம் நன்மை தீமைகளறிந்து அகப்பற்று புறப்பற்று முதலியவை நீக்கினவர்களுக்கு! ஒன்றை = எனது என எப்பொருளின் கண்ணும் இச்சை வைத்து! நாளைக்கென்று வைப்பது! இது நாளைக்காகட்டுமென்று வைத்திருப்பது! தீதெனத் தெளிந்தனன் = பொல்லாங்கு விளையுமெனத் தெளிவுற்றறிந்தேன். இறை = எது மன்னனே!

விசேட உரை :—ஓர் வகைத் தேனீககளால் மதுக்களை சிறிது சிறிதாகத் தேடிச் சேர்த்து! தானும் உண்ணாது தன் உயிரையும் இழத்தல் கண்டு, இருவித பற்றினையும் அற்றவர்கள் முன் வந்துற்றதைப் புசிப்பதேயன்றி, நாளைக்கு என்று ஒன்றை வைத்திருப்பது தகாதென்று இவ்வீக்களால்; நான் தெரிந்துளேன்!

இதற்குதாரணம் திருக்குறள் :

"மற்றுந் தொடர்ப் பாடெவன் கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை" எனக் கூறும்.

(அவதாரிகை)

புருவினாலறிகின்ற தீஃதெனல்

26. நீனிறக்கொடு வேட்டுவன் படுத்தவன் வலைவாய்த்
தூனிறப்பெடை பார்ப்பினந் துயர்தல் கண்டணுகித்
தானு முற்றதி லொருபுறவிறந்தது தன்னூ
லூன முற்றிடுமெனத் தமர் சிநேகமிங் கொழித்தேன்.

நீலகண்டீய உரை விளக்கம் :— நீனிறக்கொடு வேட்டுவன் படுத்த = கரியவுடலையும் கொடிய மனத்தினையும் உடைய வேடனானவன்! படுத்து வைத்த! வன்வலையாய் = வலிய வலையின் கண்! தூநிறப் பெடை = வெண்ணிற

மாகிய புருவும்! பார்ப்பினம்=குஞ்சுகளும்! துயர்தல் கண்டு வருத்தமடைவதை நோக்கி! அணுகி அதிற்ருனு முற்று! ஒரு புரு இறந்தது தன்னுல்=நெருங்கி அவ் வலையிற்ருனும் வீழ்த்து ஆண் புருவானது இறந்தது என்பதை அறிந்து யானும்! தமர்சிநேகம்=பெண்டீர் புத்திராதியரிடத்துள்ள பற்றுக்கள் வைப்பின்! ஊன முற்றிடுமென இங்கொழித்தேன்—கேடடையும் படியாய் நேருமென் றறிந்து அவரிடத்துள்ள பற்றினை நீக்கியுள் ளேன்.

விசேட உரை :—வேடனது கண்ணியிற் சிக்கியுள்ள பேடுங்குஞ்சுகளும் வருந்துவதை நோக்கி ஆண் புரு வும் அக்கண்ணியிற் சிக்கித் தானும் இறந்ததை யான் கண்டு மனைவி மக்கள் என்ற பற்றுடையோரை நான் நீக்கியுள்ளேன்! என்பதாம்!

(அவதாரிகை வேறு)

தாசியினுலடைகின்ற திஃதெனல்

27. சோதி மாடந் துலங்கு மிதிலைவாழ்
பேதையா மொரு பிங்கலை யென்பவ
ளோது மாசை யொழிப்பது நன்றெனக்
கோதிலாக் குருவானது கூறுவாம்.

நீலகண்டிய உரை விளக்கம் :—சோதி மாட ந் துலங்கு மிதிலைவாழ் பேதையாம் ஒரு பிங்கலை என்பவள்=அழகு விளங்கா நின்ற மாடங்களையுடைய மிதுலையென்னும் நகரத்தில் வாழா நின்ற பிங்கலை என்னும நாமமுடைய ஒரு கணிகை மாதானவள்! ஓதுமாசை ஒழிப்பது நன் றென=ஆசை என்று சொல்வதை ஒழித்து விடுதல் நலமென்று கோதிலாக் குருவானமை கூறுவாம்=குற்ற மில்லாத குருவான தன்மையை யாம் சொல்லுவோம்!

இதுவுமது

விசேட உரை :— அழகு விளங்கா நின்ற மாடங்களை யுடைய மிதுலை என்னும் நகரத்தில் வாழா நின்ற பிங் கலை என்னும் நாமமுடைய ஒரு கணிகை மாதானவள் ஆசை என்று சொல்வதை ஒழித்து விடுதல் நலமென்று குற்றமில்லாத குருவான தன்மையை யாம் சொல்லு வாம்.

(அவதாரிகை இதுவுமது)

28. பேசுகின்றவப் பிங்கலை யென்பவ
டாசி யாணலம் விற்குந்தகை மையா
ளாசையாற் பொருணல்கு நல்லாடவர்
பூசுசாந்தப் புயம் புணர்வாளரோ.

**நீலகண்டிய உரை விளக்கம் :**—பேசுகின்ற அப்பிங் கலை என்பவள் = முன்னர்க் கூறிவந்த அந்தப் பிங்கலை என்னும்! தாசியாள் = கணிகை மாது = நலம் விற்கும் தகைமையாள்! தன்னிடத்துள்ள இன்பத்தை பொருள் கொடுப்பவர்க்குக் கொடுக்கின்ற குணத்தினையுடையாள் ஆசையால் பொருள் நல்கும் = இவளிடத்துண்டான இச்சை காரணமாக திரவியத்தைக் கொடுக்கும்! நல் ஆடவர் பூசு சாந்தப் புயம் புணர்வாள் = அழகிய புருஷர்களுடைய கந்தாதிகள் பூசிய புயங்களையே ஆலிங்கனம் செய்பவள்!

இதுவுமது

விசேட உரை:—முன்னர்க் கூறிவந்த அந்தப் பிங்கலை என்பவள் கணிகைமாது தன்னிடத்துள்ள இன் பத்தைப் பொருள் கொடுப்பவர்க்குக் கொடுக்கின்ற குணத்தினையுடையவள்- இவளித்துண்டாம் இச்சை காரணமாக பொருள் கொடுக்கின்ற அழகிய புருடர்க

ளுடைய கந்தாதிகள் பூசிய புயங்களையே ஆலிங்கனம் செய்பவள்.

(அவதாரிகை)

இதுவுமது

29. இன்ன வண்ணமிரும் பொருளீட்டு நாள்
சொன்ன வண்ணம் பொருள் பெறத் தோய்பவர்
மன்னும் வண்ணமோ ரல்லில் வராமையா
லன்ன வண்ண நடையள யர்ந்தனள்.

நீலகண்டீய உரை விளக்கம்:—இன்ன வண்ணம் இரும் பொருள் ஈட்டுநாள் = இவ்வகையாகிய விருத்தி யினுலே மிக்க திரவியம் சேர்த்து வைக்கும் நாளிலே! சொன்ன வண்ணம் பொருள் பெறத்தோய்பவர் மன்னும் வண்ணம் = இவள் சொல்லியவாறு பொருள் பெற்றுக் கொண்டு தன்னைப் புணர்கின்றவர் தன்னுேடு சேர்ந்து இருக்கும் வகை! ஓர் அல்லில் = ஒரு நாள் இர வில்! வாராமையால் அன்ன வண்ண நடையாள் = வாராதபடியால் அன்னம் போலும் நடையினையுடைய பிங்கலையென்பவள்! அயர்ந்தாள் = தளர்வுற்றனள்!

(இதுவுமது)

விசேட உரை:—இவ்வகையாகிய விருத்தியினுல் மிகுதியான பொருளைச் சேர்த்து வைக்கும் நாளிலே இவள் சொல்லியவாறு பொருள் பெற்றுக் கொண்டு தன்னைப் புணர்வோர் தன்னுேடு சேர்ந்து இருக்கும் வகை ஒரு நாள் இரவில் வாராதபடியால் அன்னம் போலும் நடையினையுடைய பிங்கலை என்பவள் மிகத் தளர்வடைந்தனள்!

(அவதாரிகை இதுவுமது)

30. மறுகி னூடுவரு பவர் யாவரும்
பெருக நீ பொரு ளென் றுறும் பெட்பொடுங்
குறுகி யீந் துடன் கூடுவரோ வெனச்
சிறுகு மோரிடை யார்த்துளந் தேம்புமே.

நீலகண்டீய உரை விளக்கம் :—மருகின் ஊடுவருப வர் யாவரும் = வீதியின் வழியே வருவோர்கள் யாவருமே! பெருக நீ பொருள் என்று உறும் பெட் பொடும் குறுகி ஈந்து உடன் கூடுவரோவென = நீ இப் பொருளை யேற்றுக் கொள்வாய் என்று மிக்க விருப்ப முடையர்களாய் என்னிடத்திற் கொடுத்து என்னுடன் சேர்ந்து வாழ்வார்களா என்று! சிறுகுமோர் இடை = நுண்ணிய இடையினையுடைய பிங்கலை என்பவள்! ஆர்த்துளம் தேம்பும் = பெருமூச்செறிந்து மனவாட்டத் தினை அடைந்தனள்!

(இதுவுமது)

விசேட உரை :—வீதியின் வழியே வருவோர்கள் யாவருமே! நீ இப்பொருளை யேற்றுக்கொள்வாய் என்று மிக்க விருப்புடையோராய் என்னிடத்திற் கொடுத்து என்னுடன் சேர்ந்து வாழ்வார்களா என்று நுண்ணிய இடையினையுடைய பிங்கலை என்பவள்! பெரு மூச்செரிந்து மனவாட்டத்தினை அடைந்தனள்!

(அவதாரிகை இதுவுமது)

31. நேசமாய் நெடுமாட நிரைபுகு
மாசையாம் வளியாங்கு நின் றுந்தலால்
வாசவார் குழன்மீள மறுகுறு
மூச லாடும் வகையுள மொக்குமே.

நீலகண்டீய உரை விளக்கம் :—நேசமாய் நெடுமாட நிரை புகும் = பொருள் மீது வைத்த நேயத்தையுடையவளாகி வரிசைக் கிரமமாயமைத்துள்ள மனையுட் புகுவாள் ஆசையாம் வளி அங்கு நின்றுந்தலால் = ஆசை என்னும் வாயுவானது அம்மனைக்குள் நின்ற அவளைத் தள்ளி விடுதலால்! வாசவார்குழல் மீளமறுகுறும் = திரும்பவும் வீதியில் வந்து நிற்கும்! இவ்வாறே உள்ளே போதலும் வெளியே வருதலுமாய் இருத்தலால்! ஊசலாடும் வகை உளம் ஒக்குமே = ஊசல் ஆடுவதே போன்றதாய் அவள் மனம் ஓடித் திரிந்தன!

(இதுவுமது)

விசேட உரை :—பொருள் மீது வைத்த நேயத்தையுடையவளாகி வரிசைக்கிரமமாயமைத்துள்ள மனையுட் புகுவாள் ஆசை என்னும் வாயுவானது அம்மனைக்குள் நின்ற அவளைத் தள்ளி விடுவதால் மணம் பொருந்திய கூந்தலையுடைய பிங்கலை திரும்பவும் வீதியில் வந்து நிற்கும் இவ்வாறே உள்ளே போதலும் வெளியே வருதலுமாய் இருத்தலால் ஊசல் ஆடுவதே போன்று அவள் மனம் ஓடித்திரிந்தன!

(அவதாரிகை இதுவுமது)

32. வாயினின்று நடுங்கு நடுவிரா
வாய தென்றயர் வெய்தியகம் புகும்
நேய நண்பொரு னெஞ்சினிணைத்தழும்
பாயன்மீது படுக்கும் பதைக்குமே.

நீலகண்டீய உரை விளக்கம் :—வாயில் நின்று = வாயிற்படியில் நின்று கொண்டு! நடு இராவாயதென்று நடுங்கும் = பாதி இரவு கழிந்ததே என்று நடுங்குவள்! அயர்வு எய்தி அகம் புகும் = மிக்க வருத்தமுற்று வீட்டி

னுள்ளே புகுவாள்! நேய நன் பொருள் நெஞ்சில் நினைந்தழும் = இனிமை தரும் பொருள் மேலும் மேலும் வாராமையால் மனத்தில் நினைந்து நினைந்து வருந்து வள்! பாயல் மீது படுக்கும் பதைக்கும் = படுக்கையிற் சயனங் கொள்ளாது நெஞ்சம் நடுக்கத்தையடையும்!

(இதுவுமது)

**விசேட உரை:**—வாயிற்படியில் நின்று கொண்டு பாதி இரவு கழிந்ததே என்று நடுங்குவாள்! மிக்க வருத்தமுற்று வீட்டினுள்ளே புகுவாள்! இனிமைதரும் பொருள்! மேலும்! மேலும் வாராமையால் மனத்தில்! நினைந்து! நினைந்து! வருந்துவள்! படுக்கையிற் சயனங் கொள்ளாது நெஞ்சம் நடுக்கதைத்தயடையும்!

(அவதாரிகை இதுவுமது)

33. இன்னதன் மையிங் கெய்திய வேந்திழை
பொன்னி னுற்ற விவ்வாசை பொல்லாத
தென் றுன்னி யுன்னி யொழிந்த மனத்தொடு
மன்ன மன்னுள் மகிழ்ந்திவை சொல்லுமால்.

**நீலகண்டீய உரை விளக்கம்:**—இங்கு இன்னதன்மை = இவ்விடத்தே இத்தன்மைத்தாய துன்பத்தினை! எய்திய ஏந்திழை = பொருந்தியுள்ள அத்தாசி என்ப எள்! பொன்னின் உற்ற இவ்வாசை பொல்லாததென்று = தான் பொருள்மேல் வைத்த இந்த ஆசையானது. துன்பத்தை விழைவிப்பதே என்று! உன்னி உன்னி = நினைந்து நினைந்து! ஒழிந்த மனத்தொடு = அவ்வாசை நீங்கிய மனமுடையவளாகி! அன்னம் அன்னுள் = அன்னமே போன்ற நடையினையுடைய பிங்களை என்ப வள்! மகிழ்ந்து இவை சொலும் = மகிழ்வுடையளாய் இவை கூறத் தொடங்கினள்!

(இதுவுமது)

விசேட உரை :—இவ்விடத்தே இத்தன்மைத்தாய துன்பத்தினைப் பொருந்தியுள்ள அத்தாசி என்பவள் ! தான் பொருள் மேல் வைத்த இந்த ஆசையானது! துன்பத்தை விழைவிப்பதே என்று நினைந்து! நினைந்து அவ்வாசை நீங்கிய மனமுடையவளாகி அன்னமே போன்ற நடையினையுடைய பிங்கலையென்பவள்! மகிழ்வுடையளாய் இவை கூறத் தொடங்கினாள்.

(அவதாரிகை இதுவுமது)

34. துயரமோ தொலையாது செய்யாசை யாஞ்
செயிரினோங்கியுஞ் சேணடங்கா வனம்
வைரமாகிய வாள்கொடு வெட்டிடா
துயிரினோர்க் கெங்கு வகை யுண்டாகுமே.

நீலகண்டீய உரை விளக்கம் :—துயரமோ தொலையாது செய் ஆசையாம் செயிரின்=துன்பமே நீங்காதுள்ள இவ்வாசை என்பது குரோதத்தைவிட மிக்கதும் சேண் அடங்காவனம்=ஆகாயத்திற் சென்று ஓங்கிய அளவில்லாத அடவியாம் அதனை! வைரமாகிய வாள் கொடு = விஷயங்களிலுண்டாம் தோஷ திருஷ்டியால் உண்டான வைராக்கிய மென்கின்ற வாளாயுதங் கொண்டு! வெட்டிடாத உயிரினோர்க்கு = அதனைச் சேதித்துப்பண் படுத்தாத சீவர்களுக்கு! எங்கு உவகை உண்டாம்=எவ்வகையால் அவர்கள் மகிழ்வுடையவராவர்கள்! ஒருபோதுமாகார்!

இதுவுமது

விசேட உரை:—துன்பமே நீங்காதுள்ள இவ்வாசை என்பது குரோதத்தைவிட மிக்கதும் ஆகாயமளாவிய அடவியாம் அதனை விஷயங்களிலுண்டாம் தோஷ

திருஷ்டியால் உண்டான வைராக்கியமென்னும் வாளாயுதங் கொண்டு அதனைச் சேதித்துப் பண்படுத் தாத சீவர்களுக்கு எவ்வகையால் அவர்கள் மகிழ் வுடையவராவார்கள் ஒரு போதுமாகார்!

(அவதாரிகை இதுவுமது)

35. உன்னிற் போத வுருவத் தலைவனுண்
மன்னிப் போகம் வழங்கி வதியவு
மின்னைப் போல் விழிநாதனை வித்தொறுத்
தென்னைப் போலயர் வாரெவ ருண்டரோ.

நீலகண்டீய உரை விளக்கம் :—உன்னில் = விவேகத் தால் ஆராய்யுமிடத்து! போதவுருவத் தலைவன் உள மன்னிவதியவும் = உண்மையறிவானந்த வடிவமாயுள்ள அறிவு சொரூபமாகிய தலைவன் = உள்ளத்தில் நிலை பெற்று இருந்து! போகம் வழங்கி = ஆனந்த வடிவ அநுபவத்தைக் கொடுத்துத் தாதாத்மிய சம்பந்த முற்றிருக்கவும்! மின்னைப் போல்விழி = மின்னலே போன்று தோன்றி மறைகின்ற நாதனை நைவித்து = ஒரு புருடனை நினைந்து! நலியப்பட்டு! ஒறுத்த என்னைப் போல் = சுழன்று திரிந்த என்னைப் போன்று! அயர்வார் எவருண்டு = தளர்ச்சியை அடைந்தவர் யாவர்! இருக் கின்றார்கள்!

அடுத்த செய்யுளோடு தொடர்

விசேட உரை :—விவேகத்தால் ஆராயுமிடத்து! உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள அறிவு சொரூப மாகிய தலைவன்! உள்ளத்தில் நிலைபெற்று இருந்து! ஆனந்த வடிவ அநுபவத்தைக் கொடுத்துத் தாதாத்மிய சம்பந்தமுற்றிருக்கவும்! மின்னலே போன்று தோன்றி மறைகின்ற ஒரு புருடனை நினைந்து நலியப்பட்டு சுழன்று

திரிந்த என்னைப் போன்று தளர்ச்சியையடைந்தவர் யாவர் இருக்கின்றார்கள்!

(அவதாரிகை இதுவுமது)

36. சலத்தையுந் தசையென் பொடுசாற்றுமும்
மலத்தையும் மயிர்த்தோலின் மறைத்ததை
நலத்ததென்று நயந்து நலிந்தவென்
புலத்தையென் கொல் புகலப் பெறுவதே.

**நீலகண்டீய உரை விளக்கம்** :—சலத்தையும் தசை என் பொடு சாற்று மும்மலத்தையும் = நீரினையும் மாமிசங்களை யும் என்புகளுடனே சொல்லுகின்ற ஆணவம் கன்மம் மாயை என்ற மூவிதமான அழுக்குகளையும்! தோலின் மறைத்ததை = சருமங்களினல் மறைத்து வைத்துள்ள இத்தேகத்தினை! நலத்ததென்று நயந்து நலிந்த = நன்மை தரத்தக்கததென எனது அறியாமையால் ஆசை யுற்று மெலிவையடைந்த! என்புலத்தை என்கொல் புகலப் பெறுவது = எனது விவேகத்தை என்னவென்று சொல்லத் தக்கது! என்பதாம்.

விசேட உரை:—இவ்வாறு பிங்கலையென்பவள் தனது விவேகத்தால் ஆன்ம ஆனன்ம விசாரம் செய் தனள், செய்து கூடஸ்த வடிவ அறிவு சொரூபமே தமது தலைவனுகவும் தான் சீவத்துவரூப தலைவியெனவும் அறிந்து ஆனந்த சொரூபமாயினள்!

(அவதாரிகை இதுவுமது)

37. என்று கூறிய வேந்திழை யீறிலா
தொன்று மாசை யொழித்து வப்பெய்தின
ளன்று யானவ்வகை யறிந்தாசையை
வென்றி வீர விடுத்தனன் வேரொடும்.

நீலகண்டீய உரை விளக்கம்:—என்று கூறிய ஏந்திழை =இவ்வண்ணமாகக் கூறிய பிங்கலை என்னும் கணிகை மாதானவள்! ஈறிலாது ஒன்றும் ஆசை ஒழித்து=முடிவில்லாது வந்து பொருந்திய ஆசையினைத் தொலைத்து! உவப்பெய்தினள்=மகிழ்வினை அடைந்துளாள்! அவ்வகை அறிந்து=அவள் ஆசையினை ஒழித்த நெறியறிந்து-நான் அன்று ஆசையை வேரொடும் விடுத்தனன்! நானும் ஆசையினை அந்நாளிலே தானே ஒரு சிறிதுமின்றித் தொலைத்துளேன்! வென்றிவீர=வெற்றியினையுடைய எதுமகா வேந்தே!

விசேட உரை:—ஒரு கணிகையானவள் நாடொறும் அடையுந் திரவியம் ஒரு நாள் இரவில் பெருமையால் அடைந்துள்ள துன்பத்தினையும் அதற்கேதுவாகிய அவாவினையும் விவேகமென்னும் வாளினால் வேருடன் களைந்தொழித்த பின்னர் இன்புற்ற தன்மையை யான் அறிந்து எனது விவேகமென்னும் வாளினாலே சேதித்து மூலத்தோடுங் கெடுத்தேன் என்பதாம்!

(அவதாரிகை)

(அன்றிற் பட்சியாலறிகின்ற திஃதெனல்)

௯8. அன்றிலூண் கவர்ந்தந்தரத் தேகுழி
துன்றுமோர் புட்டுரந்து பறித்தலு
மென்றவ்வூனை யொழிந்துவப் புற்றதா
லென்றுமோர் பொரு ளுற்றிட ருற்றிலேன்.

நீலகண்டீய உரை விளக்கம்:—அன்றில் ஊன் கவர்ந்து=ஓர் அன்றிற் பறவையானது தசையை மூக்கினால் எடுத்துக் கொண்டு! அந்தரத்து ஏகுழி=ஆகாசத்தின் வழியே செல்லும்போது! துன்றும் ஓர் புல்=அவனை நெருங்கி வந்த ஒரு பறவையானது! துரந்து பறித்தலும்

=வலியோடு கூடியதாய் பறித்துக் கொண்டதும்! ஒன்றவ்வூனை ஒழிந்து=தான் கவர்ந்துள்ள தசையை விட்டொழித்து! உவப்புற்றதால்=அது களிப்பினை யடைந்துள்ள தன்மையால்! என்றும் ஒரு பொருளுற்று =எக்காலத்தும் ஓர் பொருளில் இச்சையை வைத்து! இடர் உற்றிலன்=துன்பமடைந்திலேன்!

விசேட உரை:—ஓர் பறவையானது தனக்கானதோர் இரையினைத் தேடியெடுத்துக் கொண்டு ஆகாய வழிச் செல்ல அதனினும் வலியுடைய மற்றோர் பறவையானது அதனைப் பறித்துச் செல்ல, ஒழிவு பொருந்திய அது களிப்படைந்தமை கண்டு யானும் மற்றோர் பொருள் களின் கண் பற்றுதல் அற்ற தன்மையானது அவ்வன் றில் பறவையால் இது பெறப்பட்டதென்க!

(அவதாரிகை)

நாகத்தினாலறிகின்ற தி:்தெனல்

39. சுற்றின் மேவிய தொல்கரை யான்புரி
புற்றின் மேவு புயங்க மென்றோர்ந்தபி
னுற்ற யானுஞற் றேன்மட மூர்தொறும்
மற்றுளோர் செய் மதிற்குகை வைகுவேன்.

நீலகண்டீய உரை விளக்கம்:—சுற்றில் மேவிய தொல் கைரயான் புரிபுற்றில்=புற்றின் ஓரமாயுள்ளதில் பழமை யாகிய செல்லுகளால் அமைத்துள்ள புற்றுக்குள்ளாக! புயங்கம் மேவுமென்று ஓர்ந்தபின்=நாக பாம்பானது வசிக்கின்றது என்பதை அறிந்த பின்னரே! யான் உற்று மடமுஞற்றேன்=யானும் அப்பாம்பினையே நோக்கி தனக்கெனவோர் மடமோ சத்திரமோ இயற்றுவது ஒழிந்தேன்! ஊர்தொறும் மற்றுளோர் செய்மதிற்குகை =ஒவ்வொரு ஊர்கள் தோறும் இல் அறத்தார் செய்து

வைத்துள்ள பொதுச் சாவடிகள் மதில் சூழ்ந்த சத்திரங் களிற்றனே! வாசம் பண்ணுவேன்!

விசேட உரை:—நாகபாம்பானது தனக்கென ஓர் இருப்பிடமின்றி கரையானால் அமைத்த புற்றின்கண் வாசம் செய்துள்ளதறிந்து! யானும் தனக்கென ஓர் சாவடியோ சத்திரமோ அமைக்காமல் மற்றையோரால் கட்டி வைத்த பொதுச் சாவடி சத்திரங்கள் முதலிய வற்றில் இருக்க வேண்டுமென்பதை இப்பாம்பினாலே தெரிந்து கொண்டேன்! என்பதாம்.

(அவதாரிகை)

நூலிழைக்குஞ் சிலந்தியாலறிகின்ற திஃதெனல்

40. நுண்ணிதான சிலம்பி யுண்டாக்குநூ
னண்ணியே யுறைந்துண் பதைநாடியா
னெண்ணிலா வுயிர் தந்தவை யேய்ந்துறைந்
துண்ணுமோர் பொருளே யென்றுணர்ந்தனன்.

நீலகண்டீய உரை விளக்கம்:—நுண்ணிதான சிலந்தி உண்டாக்கு நூல்=சிலந்திப் பூச்சியானது தனது சட பாகமாகிய எச்சிலால் நுண்ணிதாகிய ஒருவலையைச் சேதன பாகமானது அமைத்துள்ளது அந்நூலின் கண்ணே! நண்ணியே உறைந்து=பொருந்தி வாசம் செய்து! உண்பதை நாடியான்=மீண்டு அந்நூலினை யுண்டு தன்னுள் ஒடுக்கிக் கொள்வதை யான் பார்த்து! எண்ணிலாவுயிர் தந்து அவையேய்ந்து=எண்ணிக்கை யற்ற சீவகோடிகளைப் படைத்து! அவ்வுயிர்கள் தோறும் பொருந்தி இரட்சித்து! உறைந்துண்ணும்=சிதாபாச வடிவ சீவர்களைப் பிம்பவடிவமாயுள்ள தன்னுள் அபேத மாக்கிக்கொள்ளும்! ஓர் பொருளேஎன்று உணர்ந்தனன்

= அபின்ன நிமித்தோபாதான காரணன் ஈசுரன் ஒருவனே என்பதை அறிந்துளேன்!

விசேட உரை:--சிலந்திப் பூச்சியானது தானே தனது சடபாகத்தால் நூல் இழைத்து அதில் தம் சேதன பாகத்தால் வலையை உண்டு பண்ணி அதில் தங்கிக் காத்து மீண்டு தன்னிடத்தில் தானே கிரகித்து தனது வடிவமே செய்துகொள்வது போன்று! பரம் பொருளும் நாமரூபகாரியமாகிய! சகசீவ பரங்களை தனது சடபாகத்தால் தானே உபாதான காரணமாயும் சேதனபாகமே நிமித்த காரணமுமாய்த் தோற்றுவித்து அதில் இருந்து காத்து முடிவில் தன்னிடத்தில் ஒடுக்கிக் கொள்ளும் என்பதை இச்சிலந்திப்பூச்சியால் உணர்ந்துளேன் என்பதாம். ஆகலின் அபின்ன நிமித்தோபாதான காரணமாயுள்ள பரம் பொருள் ஒன்றே என்பதை உணர்ந்துளேன் என்பது கருத்து!

(அவதாரிகை)

சிறுவராலடைகின்ற திஃதெனல்

41. மானமோடவமான மடைந்திடா
தூனநீங்கி யுவந்த சிறுவனே
தேனுலாந் தொடையோய் முனந் தேர்ந்ததால்
யானுமோ கையுற்றேன்ன வையுற்றரோ.

நீலகண்டீய உரை விளக்கம்:—மானமோடு அவமானமா அடைந்திடாது = இரகஸ்ய ஸ்தானமாயுள்ள குறியினை ஆடையால் மறைக்கும் மானத்தினையும் திகம்பர வடிவமாயுள்ள அவமானமுமின்றி! ஊனம் நீங்கி = தனது இழிந்த தன்மை நீங்கி! உவந்த சிறுவனை = மகிழ்வினையடைந்த சிறுபிள்ளையை! முனம் யானுந் தேர்ந்ததால் = முன்னமே யான் அறிந்துளேனாகலின்!

அவையுற்று ஓகையுற்றேன் = மானவமானம் என்னும் அவை அடையாது திகம்பரதாரியாய் மகிழ்வுடையனு இருக்கின்றேன்! தேனுலாந் தொடையோய் = தேன் சொரியும் மலர்மாலை அணிந்த யெது மகாராஜனே!

விசேட உரை :—சிறு குழந்தைகட்கு எப்பொருளி லும் விழைதல் வெறுத்தலின்மையால் அவனும் மான அவமானமின்றியவனுய் இருக்கின்ருன். அதனுல் பெறும் இன்பமோ பெரிதாக உள்ளதென உணர்ந்து யானு மவ்வாறே விழைதல் வெறுத்தலின்றிய தன்மையால் திகம்பர வேடமாய் மகிழ்வடைந்துளேன் என்பதை யறிந்துகொள்வாய் அரசனே என்பது கருத்து!

(அவதாரிகை)

எவ்விதத்தாலாயினு முயிர்களின்பமடைய வேண்டுமெனல்

42. அன்பினுயினும் மாசையினுயினும்
வன் பயத்தின்வயி ரத்தினுயினும்
நன் பெருந்திரு நா தனையே நினைந்
தின்பமவ்வுயி ரெய்துவ தன்பதை.

**நீலகண்டீய உரை விளக்கம்** :—அன்பின் ஆயினும் = அன்பினுலேனும்! ஆசையின் ஆயினும் = ஆசையோடா யினும்! வன்பயத்தின் வயிரத்தினுயினும் = வலிய பயங் கரத்தினுலேயாயினும் அல்லது வைராக்கியத்தினுலே யாயினும்! நன்பெருந்திரு நாதனையே நினைந்து = நன்மை மிக்க அணிமாதிய செல்வத்தையுடைய பரம் பொருளையே! நினைந்து அவ்வுயிர் இன்பம் எய்துவது என்பதை = தியான வடிவமாயுள்ள பாவனுவயத்தால் நினைந்த அச்சீவர்கள் நிரதிசயவின்பத்தினை அடையலா மென்பதையே !

விசேடஉரை :--பிரகலாதன் முதலியோர் அன்புடனே நினைந்தவர் ஆவர். இரணியன் முதலியோர் துவேஷங்காரணமாக நினைந்தவராவர். சிசுபாலன் முதலியோர் பயங்காரணமாக நினைந்தவர் ஆவர் இவ்வாறே ஒவ்வொரு மேலோர்களும் அடைந்த நெறியாகும் மணிவாசகர் முதலியோர் அன்பின் வழி நின்றோர்! இவ்வாறே பெரிதுக்கெல்லாம் பெரிதாயுள்ள பரம்பொருளை எல்லாச் சீவர்களும் நினைந்து பரமானந்த அடைவினைப் பெறவேண்டுமென்பதை பேற்கூறும் புழுவால் அறிந்துளேன் என்பதாம்.

(அவதாரிகை)

குளவி யெடுத்த புழுவினுலறிகின்ற திஃதெனல்

43. ஈங்கறிந்தனன் யானுற் றெடுத்தொரு
பாங்கமைத்துப் பரிவிற் பறந்தய
னீங்கும் வண்டை நினைந்த பசும் புழு
வாங்கவ் வண்டுரு வானது கண்டரோ.

நீலகண்டிய உரை விளக்கம்:—உற்று எடுத்து = தன் வடிவமாகுதற்குரிய பக்குவம் அமைந்த புழுவினை ஆராய்ந்து எடுத்து! ஒரு பாங்கு அமைத்து = தன்னுல் அமைத்தொரு மண் கூட்டினிற் பொருந்த வைத்து! பரிவில் பறந்து அயல் நீங்கும் வண்டை = தன் வடிவாக்க வைத்த அன்பால் அதனைக் கொட்டிவிட்டு அதற்கு அயலாய் வெளிவந்து இசைபாடும் பிள்ளைக் குழவியை! நினைந்த பசும்புழு = (தன்னை மீண்டும் வந்து கொட்டி விடுமே என்னும் அச்சத்தால்) மறவாது நினைந்திருந்த பசிய புழுவானது! ஆங்கு அவ்வண்டுருவானது கண்டு = அப்பிள்ளைக் குழவியின் வடிவமான தன்மையை நோக்கி! யான் ஈங்கு அறிந்தனன் = நான் இதனையும் இவண் அறிந்துளேன்!

விசேட உரை :—ஓர் பிள்ளைக் குழவியானது பக்குவமறிந் தெடுத்து வந்து கூட்டில் வைத்து ஒருமுறை அதனைத் தனது கொடுக்கால் கொட்டி வெளியே வந்து இசைபாடும் அக்குழவியை மீண்டும் கொட்டி விடுமோ என்ற பயத்தால் அக்குழவியையே நினைந்திருந்த அப்புழுவானது அக்குழவியின் வடிவத்தையே அடைந்ததே போன்று யானும் மீண்டும் எங்ஙன் பிறவி வந்து விடுமோ என்னுமச்சத்தால் உண்மை அறிவானந்த வடிவமாயுள்ள ஆத்மாவையே நினைந்திருந்து அதுவே யானுயினேன் என்பதாம்! அதற்குதாரணம்!

"உடலமாசையாற் றியானிக்கிற்றியானித்த
உடல்களாகுவர் மைந்தா
தொடர்பவங்கெடச் சொரூபமே
தியானிக்கிற் சொரூபம் ஆகுவர் மெய்யே.

என்று கைவல்யம் கூறுகின்றதுணர்க!

அடங்கிய விருத்தியான் என்று அறிந்தபின்
செறிந்த மண்ணின்
குடம்பையுட் புழுமுன் னூதும்
குழவியின் கொள்கை போல
தொடங்கிய குருவும் ஆன்ம சொரூபமே
மருவ வேண்டி உடம்பினுட்சீவனைப்பார்த்
துப தேசம் ஓதுவாரே!

(அவதாரிகை)

இத்தனைக்கு மாதாரமாகிய தேகத்தாலாகிய திஃதெனல்

44. வாக்கினைக் கடந்தோங்கி மற்றெங்கணு
நீக்கமின்றி நிறைந்த வறிவினை
யூக்கமுற்றுணர் தற்கிட மாதலி
ளுக்கையுங் குருவான தரசனே.

நீலகண்டீய உரை விளக்கம் :—வாக்கினைக் கடந்து ஓங்கிமற்று எங்கணும் நீக்கமின்றி நிறைந்த அறிவினை =மலவிட்சேபமுடை மனத்தினுக்கும், இலக்கணு விருத்திக்கேயன்றி வாக்கிய விருத்திக்கும் யெட்டாததாயுயர்ந்து எல்லாவிடங்களிலும் ஆகாயம் போன்று நீக்கமின்றி பரிபூரண பரமானந்த வடிவமாயுள்ள ஆன்ம சொரூபத்தை! ஊக்கமுற்று உணர்தற்கு=விவேக முதலிய சாதனங்களால் முயற்சி செய்து, அறிந்து கொள்வதற்கு! ஆக்கையும் இடமாதலின் = இம்மானுட உடம்புதானுதாரமாகலான்! குருவானது = இவ்வுடம்பும் ஓர் குருவாகியதாம்! அரசனே = எதுமகா ராஜனே!

விசேட உரை :— வீட்டின்பம் பெற இம்மாநுட தேகமே என்பதை "தருமம் பொருள் காமம் வீடென்னும் நான்கும் உருவத்தாலாய பயன்! என நம்மூதுரையபட்டியும் கூறியுள்ளார்! ஆகலின் முன்னர்க் கூறிவந்த இருபத்து நான்கு ஆசிரியர்களோடு கூடஸ்தவடிவ ஆன்ம சொரூபத்தை அறிவதற்கும் சாதகமாயுள்ள இம் மாநுட உடம்பும் சேர்ந்து ஓர் குருவாயிற்று என்பதாம்

(அவதாரிகை)

மானிட தேகத்தின் பெருமையை
வியந்துரைத்தல்

45. மடல் விரிந்தமரை மலர் வைகுவோன்
சடமனைத் தையுந் தந்து முவந்தில
னிடரறுக்கு மென்றெண்ணி நன்மானிட
ருடல் படைத்த பின்னுவகை யுற்றான் முனம்.

நீலகண்டீய உரை விளக்கம்:—முனம் = சிருஷ்டிக்கு முன்னரே! மடல்விரிந்த மரை மலர் வைகுவோன் இதழ் விரிந்ததாமரை மலரில் வாழும் பிரமதேவனுனவன்! சடம்

அனைத்தையும் தந்தும் உவந்திலன்=சகல சீவராசிகளின் உடலினைத்தான் படைத்தும் இது பயனுடையதன்றென்று. மகிழ்வடைந்தானில்லை! மானிடர் உடல் இடர் அறுக்குமென்று எண்ணிப் படைத்தபின் உவகையுற்றான்=மாநுடதேகமானது குருசாஸ்திராதி மூலமாய் உண்மைஞானம் பெற்று அதனால் தனது அறியாமை ஒழிந்து. பரமானந்தப் பேற்றினை அடையுமென நினைந்து! படைத்த பின்=தோற்றுவித்த பின்னரே மகிழ்வினையடைந்தனன்!

விசேட உரை :—மாநுடதேகம் அரிது என்பதற்குதாரணம்.

பெறுதற்கரிய பிறப்பு! இதன் போக்கு
அறிதற்கரிய அவதி!=பிறிதொன்றை
நாடுதற்கு நேரமுண்டோ! நன்னெஞ்சே! முத்திநெறி
கூடுதற் கல்லாது குறித்து! என்றுங் கூறுவர்.

பிரம தேவன் ஆதியில் (அஃறிணைப் பொருள்களை) பசு பட்சி முதலிய தாவர சங்கமங்களையும் படைத்து பிறவித் துன்பம் நீங்கி வீட்டின்பத்தையடைதற்குச் சாதனமாயுள்ள உயர்திணையாயுள்ள இம்மாநுட தேகம் படைத்த பின்னரே மகிழ்வுற்றாரென்று கூறியவாறும்!

(அவதாரிகை)

அரிதாகிய மானிட யாக்கையைப் பெற்றபின்
விரைவிலதற்குள்ளபிர யோசனத்தைப்
பெறவேண்டுமெனல்

46. மாந்தராக்கையிம் மானிலத் தெய்துதல்
வேந்தர் வேந்தமிகவரி தாயினுங்
காய்ந்த கண்ணிமன் கைப்பட்டிறக்குமின்
னுய்ந்து சீலத்தமர் தனன் றுகுமே.

நீலகண்டீய உரை விளக்கம் :—வேந்தர் வேந்த= அரசர்களுக்கும் அரசனே! இம்மாநிலத்து = இப்பெரிய உலகின் கண்ணே! மாந்தர் ஆக்கை எய்துதல் = இம் மநுட தேகத்தைப் பெறுவது! மிக அரிதாயினும் = மிக மிக அரிதாகவேயுள்ளதாயினும்! காய்ந்த கண் இமன் கைப்பட்டு இறக்கு முன் = அக்கினி போன்று சுவாலை வீசும் சிவந்த கண்களையுடைய எமனது கையில் அகப் பட்டு இத்தேகமழிவதன் முன்னேயே! ஆய்ந்து = (பிரஹ்ம நிஷ்டையும் அசேச சாஸ்திர பாண்டித்திய முடைய ஆசிரியர் பால் வேதாந்த விசாரம் செய்து! ஆதனுல் உண்மை ஞானத்தால்) சீலத்தமர்தல் நன்ரு கும் = நிரதிசய பரமானந்த வடிவமாயுள்ள ஆத்மாவின் கண் நிலைபெற்று இருத்தலே நன்மையாம்!

விசேட உரை :—கிடைத்தற்கரிய மானுட தேகம் கிடைத்ததாயின் அவை காலனுல் முடிவடைவதன் முன்னரே, சற்குரு மூலமாய் வேதாந்த விசாரஞ் செய்து அதனுல் உண்டாம் உண்மை ஞானத்தால் அறி யாமையைக்கெடுத்து உள்ளபடியே உண்மை அறிவா னந்த வடிவமாயுள்ள ஆத்மாவினை அடைந்து அதில் நிலைபெறுதலே, மானுட தேகம் கிடைத்ததின் பயனும் அதுவே நன்மை எனவும் கூறியதாம்.

( அவதாரிகை )

இந்தத் தேகம் பிறத்தற்கு மிறத்தற்கு மாசை காரணமாதலால் அதனை நீக்கவேண்டுமெனல்

47. உறக்கமும் விழிப்பு முறுந்தன்மை போற்
பிறக்கு மாக்கையிறக்கு மெய்ப்பெட்பொடு
மிறக்கு மாக்கையு மேய்ந்து பிறத்தலிற்
றுறக்க வேண்டு மெய்யாசையைச் சூழ்ச்சியோய்.

**நீலகண்டீய உரை விளக்கம் :—** உறக்கமும் விழிப்பும் உறும் தன்மைபோல்=உறங்குதலும் மீண்டு விழித் தலுமே பொருந்தி வருகின்ற தன்மை போன்று! பிறக் கும் ஆக்கை இறக்கும்=ஆறுவித விகார தர்மங்களை யுடைய இவ்வுடம்பானது தோன்றும் மீண்டும் ஒடுங் கும்! மெய்ப்பெட்பொடும்=சூக்குமவடிவ உடம்பிலுள்ள அந்தக்கரணத்தின் பரிணமமாகிய அவாவோடும்! இறக் கும் ஆக்கையும்=இறத்தலையுடைய சூக்கும உடம்பா னது! ஏய்ந்து பிறத்தலில் மீண்டும் பிறப்பினை அடை யும் ஆதலால்! மெய் ஆசையைத் துறக்க வேண்டும்= சூக்கும உடம்பாகிய அந்தக்கரணத்திலுள்ள அவா வினை விடய தோஷபாவன திருஷ்டியால் ஒருங்கே விட வேண்டும்! சூட்சியோய்=இராச தந்திரமுடையவனே.

**விசேட உரை :—** உறங்குவது போலும் சாக்காடு உறங்கி!
விழிப்பது போலும் பிறப்பு!

என்று தெய்வப் புலமைத் திருவள்ளுவர் மொழிந்த பொய்யா மொழி கூறுவது போன்றே இங்கும் கூறி யுள்ளது. மீண்டு மீண்டும் தோன்றுதல் ஒடுங்குதல் ஆகிய செயல்களுக்கு ஆசையே காரணம் ஆகலின்

"அவாவென்ப! எல்லாவுயிர்க்கும் எஞ்ஞானன்றும்
தவாப் பிறப்பீனும் வித்து"

ஆகலின் அவற்றை விடயங்களிலுண்டாம் தோஷ திருஷ்டியால் ஒழித்துக் கொள்ளும் நெறியாவது நித்தியம் யாது அநித்தியம் யாது; என்னும் விவேக ஆராய்ச்சியாலுண்டாம்! மீண்டும்.

"அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லாமொருங்கு"

எனவும் ஒப்பற்ற தமிழ் வேதம் அறையும் ஆதலான் துறக்கவேண்டும் மெய் ஆசையே என்றார்!

(அவதாரிகை)

எதுமகா இராஜனுடனே தெத்தாத்திரைய முனிவர் இவ்வண்ணமாக உரைத்துளார் என உரைத்தல்

48. இத்திறமெது வென்பானம் எழிற்குலத்திறை வன்கேட்ப
அத்திரி புதல்வனென்ன அறை தருந்தவத்தின்மிக்கான்
சித்துருவான தெத்தாத்திரையன்முன் செப்பினனென்று
உத்தவர்க்கு ஆழிமாயன் உவந்து உரையாடினனே!

நீலகண்டீய உரை விளக்கம்:—இத்திறம் எதுவென்பான் நம் எழிற் குலத்து இறைவன் கேட்ப = இப்போது நாம் கூறிவந்த குணங்கள் யாவும் எதுவென்று சொல்லப் பட்டவன் அழகிய நமது குலத்திற் தோன்றிய அரசனு னவன்! கேட்க! அத்திரி புதல்வன் என்ன அறை தரும் தவத்தின் மிக்கான் சித்துருவான தெத்தாத்திரையின் = அத்திரிமகரிஷியின் புதல்வனென்று சொல்லப்பட்ட மனம் பொறிகள் தம் வயமுற்ற தவத்தின் மிக்கான் நிரதிசய பரமானந்த வடிவ ஆத்மாவின் ஆரூட நிலை பெற்றவன்! தெத்தாத்திரையன் என்னும் நாமத்தினை யுடையோன்! முன் செப்பினன் என்று = முன்னைய நாளிலே உபதேசம் செய்துளார் என்று! உத்தவர்க்கு = உத்தவர் என்னும் நாமத்தினை உடையவர்க்கு! ஆழி மாயன் உவந்து உரையாடினன் = சுதர்சன சக்கரா யுதத்தைத் திருக்கரத்திலேந்திய ஸ்ரீ கண்ணபிரான் மகிழ்வோடு கூடியவராய் உபதேசம் செய்தருளினர்!

விசேட உரை:—அழகிய நமது குலத்திலே தோன்றி யுள்ள! எதுமகாராஜனுக்கு! அத்திரி மகா முனிவரர் புதல்வரான திகம்பரவேடங்கொண்ட தெத்தாத்திரைய முனிவரர் உபதேசம் செய்துளார்! அதனை நாம் உனக்கு

உபதேச ரூபமாய்க் கூறி வந்தோம்! என்று ஸ்ரீ கண்ண பிரான் கூறியருளினுர்!

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

அவதூத சம்வாதம் மூலம்!

நீலகண்டீய உரைவிளக்கத்துடன் முற்றுப்பெற்றன!

ஆறிரு தடங்தோள் வாழ்க! அறுமுகம் வாழ்க! வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க! குக்குடம் வாழ்க! செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க! யானைதன் அணங்கு வாழ்க!
மாறிலா வள்ளி வாழ்க! வாழ்க சீர் அடியார் எல்லாம்!

முற்றும்.



## அன்னதானத்தின் பெருமை

1. அகரம் ஈராறு கோடி அருந்தவம் நூறுகோடி
சிகரம் மூவாறு கோடி செய்த அப்பயன்கள் யாவும்
மகரகேதனனை வென்ற மாதேவர் அடியாற்கு அன்னம்
பகரவே கனவு கண்ட பலன் தனக்கு ஒவ்வாது அன்றே.

2. வித்தமாகிய வேடத்தர் உண்ட ஊண் அத்தன்
அயன்மால் அருந்திய வண்ணமாம் சித்த மகிழ்ந்து
அவர்சேடம் பருகிடின் முத்தியாம் என்று நம்மூலன்
மொழிந்ததே எல்லாம் பெறலாம் எளிதாக அம்பலத்தே
எல்லாம் வல்லான் தனையே யேத்து.

அன்பே சிவம்

———